# காரைக்குடி நகரத்தார் நகரச் சிவன் கோவில்

# கும்பாபிடேக மலர்

## சுக்கில வருடம் - 1989.







உ

சிவமயம்

# காரைக்குடி நகரத்தார் நகரச் சிவன் கோவில்





# கும்பாபிடேக மலர்

1989

உ

சிவமயம்

# காரைக்குடி நகரத்தார் நகரச்சிவன் கோவில் கும்பாபிடேகக்குழு

## கும்பாபிடேகக்குழு :

தலைவர் :

சா. நா. அ. சொ. அண்ணாமலை செட்டியார்

துணைத்தலைவர்கள் :

ராம. வீர. பெரி. பெரியகருப்பன் செட்டியார்
சா. லெ. நா. சாத்தப்பச் செட்டியார்
அ. திருநாவுக்கரசு
மெ. செ. மெய்யப்பன்

செயலாளர்கள் :

மெ. செ. சு. மு. மெ. முத்துராமன் செட்டியார்
நா. மெ. சி. சேவு. மெய்யப்ப செட்டியார்

பொருளாளர் :

கதி. ராம. சோம. அண்ணாமலை செட்டியார்

★ ★ ★

## மலர்க்குழு :

தலைவர் :

அ. திருநாவுக்கரசு

துணைத்தலைவர்கள் :

மெ. செ. மெய்யப்பன்
கி. நா. கண்ணன்

செயலர் :

முத்து. பழநியப்பன்

இணைச் செயலர் :

சா. நா. நா. நாராயணன் (பேரா)

பொருளாளர் :

கதி. ராம. சோம. அண்ணாமலை செட்டியார்

பதிப்பாசிரியர் :

டாக்டர். வெ. சு. அழகப்பன்

63-1

உ

சிவமயம்

# பதிப்புரை

"ஞாலம் சிவன் புகழே மிகவேண்டும்" என்றும் "பேசப் பட்டேன் நின்னடி யாரில் திருநீறே பூசப் பட்டேன் பூதல ராலுன் அடியா னென்றே" என்றும் நகரத்தார்கள் நினைப்பவர்கள். சிவனுக்கே "நெஞ்சம் இடமாக வைத்தேன்" என்று வழிபடுபவர்கள். ஆகவே சுமார் நூற்றியிருபது ஆண்டு கட்கு முன்னர் காரைக்குடியின் மையப்பகுதியில் சிவன் கோவில் நிறுவினர்.

முதல் கும்பாபிடேகம் 1872 இல் நிகழ்ந்தது. பின்னர் 1888 இல் ஒரு குடமுழுக்கு நடத்தினர். அதுபோழ்து ராம. ஆத. ராம. ராம. குடும்பத்தார் கிழக்கு ராஜகோபுரம் எடுத்தனர். பிறகு 1953இல் ஒரு குடமுழுக்கு நடந்தது.

தமிழ்கடல் ராய. சொ. காரியத்தாராக இருந்தபோது பிரகாரம் முழுதும் "சிமிண்ட்" நடைபாதை அமைத்தார்கள். வெள்ளியங்கி இல்லாத சுவாமிகட்கு அவ்வடி அங்கி பல பக்தரைக் கொண்டு செய்வித்தார்கள். சரபேசர் சந்நதியும் ராய. சொ. காலத்தில் ஆறு. பழ. சி. பழ. குடும்பத்தாரால் ஏற்படுத்தப் பெற்றது. நாகநாதபுரம் கரு. கும. மீ. மீனாட்சிசுந்தரஞ் செட்டியார் தென்புறக் கோபுரத்தைக் கட்டினார்கள். (1970) அபிசீனியா நாச்சியப்ப செட்டியார் காரியத்தராக இருந்த காலத்தில் 1974 இல் ஒரு நன்னீராட்டு நிகழ்ந்தது. அவர்கள் காலத்தில் கோவிலில் திரிபுரசுந்தரி சந்நதி ஏற்படுத்தப்பட்டது.

பின்னர் விபவ வருடம் பங்குனி மாதம் 28உ (10—4—1989) திங்கட்கிழமை காலை 9-56 க்கு ஐந்தாவது குடமுழுக்கு நிகழ்ந்தது.

இக்கும்பாபிடேகக் குழுத் தலைவராகத் திரு. அ. சொ. அண்ணாமலை செட்டியார் அவர்களும், செயலாளர்களாக திரு. மெ. செ. ச. மு. மெ. முத்துராமன் செட்டியாரவர்களும், திரு. நா. மெ. சி. சேவு. மெய்யப்ப செட்டியார் அவர்களும், பொருளாளராக திரு கதி. ராம. சோம. அண்ணாமலை செட்டியாரவர்களும் பொறுப்பேற்று அல்லும் பகலும் தொண்டாற்றியது பெரிதும் பாராட்டத்தக்கது. இக்கும்பாபிடேகத்திற்குச் சுமார் ஆறரை இலட்ச ரூபாய் இதுவரை செலவாகியிருக்கிறது.

இவ்விழாவின் நிகழ்ச்சி நிரல் இம்மலரில் இடம் பெற்றமையைக் காண்க.

இவ்விழாவின் நினைவாக ஒரு மலர் வெளியிடக் குழு முடிவு செய்து அவ்வடி பொறுப்பை எனக்கு நல்கியது. தேனும் பாலும் பருகக் கூலியும் தருதல்போல் இப்பணி செய்யும் வாய்ப்பு எனக்குக்கிட்டியது. இதற்காக இக்குழுவினருக்கு எனது மனமார்ந்த நன்றியைப் புலப்படுத்திக் கொள்ளுகிறேன். மலருக்கு அன்பர்கள் பலர் விளம்பரங்கள் பெற்றுத் தந்தனர். அவர்கள் அனைவருக்கும் விளம்பரம் தந்த வணிகர்கட்கும் எங்கள் நன்னன்றி உரியது.

மலர் மணக்க எல்லாவகையாலும் உதவிய மலர்க்குழுத் தலைவர் திரு. அ. திருநாவுக்கரசு அவர்கட்கும், செயலர் திரு. முத்து. பழநியப்பன் அவர்கட்கும். ஷை குழுவின் ஏனைய உறுப்பினர்கள் அனைவர்க்கும் எனது இதய நன்றி. இம்மலர் நல்வடிவம் பெறப் பெரிதும் துணைபுரிந்து உதவிய முத்து. பழநியப்பனாரின் துணையும் பணியும் என்றும் நினைவில் இருக்கத்தக்கன. அச்சுப்படிபார்த்து உதவிய தம்பி. திரு. என்.பி. இராமசாமிக்கு எனது நன்றி.

இம்மலரில் பற்பல கோணங்களில் கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன. கவிதை-கட்டுரைகள் தந்த அறிஞர்கட்கு எங்கள் இனிய நன்றி. விளம்பரங்கள் தந்தோருக்கு மீண்டும் நன்றி. மலரில் பொன்மொழிகள்—சமய நெறிகள்—நகரத்தாரைப்பற்றிய சிற்சில குறிப்புகள் ஆங்காங்கே இடம் பெற்றுள்ளன. இம்மலரை அழகுற அச்சிட்ட ''ஸ்ரீ அம்பிகா பிரிண்டர்ஸ்'' உரிமையாளருக்கு எங்கள் பாராட்டு.

இக்குடமுழுக்கு நன்னீராட்டு விழா இனிதே நிறைவெய்த தொண்டாற்றிய அனைவருக்கும் எங்கள் உள்ளம்கனிந்த நன்றியை உரிமையாக்குகிறோம்.

மண்டலாபிடேகம் நிகழும் நாளில் (27—5—1989) சிவன் கருணைத் திருவருள் யாவருக்கும் வாய்ப்பதாக!

வணக்கம். நன்றி.

அன்பன்,

**வெ.சு.அழகப்பன்**
*பதிப்பாசிரியர்*

25—5—1989
காரைக்குடி



உ

சிவமயம்

# "காரைக்குடி நகரச்சிவன் கோவில்"

# மகா கும்பாபிடேகம்

## நிகழ்ச்சி நிரல்

*விபவ வருடம் பங்குனி மாதம் 28ம் தேதி* **(10-4-89)** *திங்கட்கிழமை காலை 9-56 முதல் 10-30 மணிக்குள் நடை பெறும்.*

*பங்குனி மீ 25உ 8—4—89 சனிக்கிழமை*
*காலை 11மணியளவில் பூர்ணுகுதி*
*இரவு 8-30 மணியளவில் பூர்ணுகுதி*

*பங்குனி மீ 27உ 9—4—89 ஞாயிற்றுக்கிழமை*
*காலை 11 மணியளவில் பூர்ணுகுதி*
*இரவு 8-30 மணியளவில் பூர்ணுகுதி*

*பங்குனி மீ 28உ 10—4—89 திங்கட்கிழமை*
*காலை 8 மணியளவில் மகாபூர்ணுகுதி*
*காலை 10 மணியளவில் கடம் புறப்பாடு*
*காலை 10-15 மணியளவில்*
**மகா கும்பாபிடேகம்**
*மாலை 3 மணியளவில் மகாபிடேகம்*
*மாலை 6 மணியவில் திருக்கல்யாணம்*
*இரவு 11 மணியளவில் பஞ்சமூர்த்திகள் திருவீதி உலா*

## நாதஸ்வரம்

8—4—89 முதல் 10—4—89 வரை திருமெய்ஞ்ஞானம் T.P.N. வேணுகோபால் குழுவினர்

9—4—89, 10—4—89 பந்தநல்லூர் T.R. தெட்சிணுமூர்த்தி குழுவினரும் விசேஷ நாதஸ்வரம்

## சமய இலக்கிய இன்னிசை நிகழ்ச்சிகள்

8—4—89 சனிக்கிழமை மாலை 6 மணி "அபிராமி அந்தாதி" என்ற தலைப்பில் சொல்லின் செல்வர் திரு. சுகிசிவம்

9—4—89 ஞாயிற்றுக்கிழமை மாலை 5 மணி
திரு. சொ. சொ மீ. சுந்தரம் தலைமையில் கவியரங்கம்
தலைப்பு : "ஆண்டவன் படைப்பில் ஐம்பூதங்கள்"
மாலை 6 மணி "இவள் என் தாய்" என்ற தலைப்பில்
நாவுக்கரசி ஞானவாணி திருமதி, இளம்பிறை மணிமாறன்

## வழக்காடு மன்றம்

10—4—89 திங்கட்கிழமை இரவு 8 மணி
தலைப்பு : "குற்றம் என்றதும் குற்றமே"
நடுவர் : பேராசிரியர் திரு. பா. நமச்சிவாயம் M.A.,

வழக்குத் தொடுப்பவர் :

டாக்டர் க. சின்னப்பா, M.A., Ph.D.,

மறுப்பவர் :

திரு. சுபாஷ் சந்திரபோஸ், M.A, M. Ed.,

10—4—89 திங்கட்கிழமை இரவு 10 மணியளவில்
ஜனாதிபதி விருதுபெற்ற இசைமேதை
அகில இந்திய வயலின் சக்கரவர்த்தி
**குன்றக்குடி வைத்தியநாதன்** குழுவினரின்
இன்னிசை நிகழ்ச்சி நடைபெறும்

## உதவிபுரியும் அறக்கட்டளைகள்

முகவரி வருமாறு :-

1. சிங்கப்பூர் நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் அறப்பணிக்கழகம் 451, செக்காலை ரோடு, காரைக்குடி.
2. பினாங்கு நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் அறப்பணிக்கழகம் 450, செக்காலை ரோடு, காரைக்குடி.
3. 'பேராக்' நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் அறப்பணிக்கழகம் 450, செக்காலை ரோடு, காரைக்குடி
4. ஸ்ரீகாசி நாட்டுக்கோட்டை நகரத்தார் அறப்பணிக்கழகம் இந்துமதாபிமான சங்கம், சிவன்கோயில் மேலவீதி, காரைக்குடி.
5. பிள்ளையார்பட்டி கற்பகவிநாயகர் கோயில் நகரத்தார் டிரஸ்ட் பிள்ளையார்பட்டி - 623 207,
6. வயிரவன் கோவில் நகரத்தார் சங்கம், வயிரவன்பட்டி-623 215.
7. பத்துபாஹட் நாட்டுக்கோட்டைச்செட்டியார்கள் அறப்பணிகழகம், மெய்யப்பன் அம்பலம் தெரு, காரைக்குடி.
8. ராமசாமி விசாலாட்சி டிரஸ்ட், விசாலம் சிட்பண்ட்ஸ், பள்ளத்தூர்.
9. நகரத்தார் ஐக்கிய சங்கம், சென்னை.
10. ஏ. எம். எம் சாரிட்டீஸ் டிரஸ்ட், சென்னை.

உ

Phone : 2315

Sri Chandramouleeswaraya Namaha

SRI SANKARA BHAGAVADPADACHARYA PARAMPARAGATHA

**His Holiness Sri Kanchi Kamakoti Peetadhipathi**

# Jagadguru Sri Sankaracharya Swamigal

**Srimatam, : : Samasthanam,**

***KANCHEEPURAM-631 502.***

Camp : Lucknow

Date : 27-2-89

**திரு சா. நா. அ. சொ. அண்ணாமலை செட்டியார்**

*காரைக்குடி-623001.*

*தங்கள் நகரச்சிவன் கோவிலுக்கு ஐந்தாவது முறையாக கும்பாபிஷேகம் நடத்த இருப்பதை அறிந்து* **ஸ்ரீ மஹா ஸந்நிதானம்** *அவர்கள் சந்தோஷித்து அந்த வைபவம் மங்களமாக நிறைவேற ஆசியளித்து பிரசாதம் அருளியிருக்கும் விபரம் தெரிவிக்கலான கார்யம்.*

*இணைப்பு பிரஸாதம்.*

*தங்கள்*

P. SRINEVASAN

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரை

**ஸ்ரீ-ல-ஸ்ரீ**

**சிவப்பிரகாசதேசிக பரமாசாரியசுவாமிகள்**

குருமகா சந்நிதானம்

திருவாவடுதுறை ஆதீனம்

**திருவாவடுதுறை-609 803**

(தஞ்சாவூர் மவாட்டம்)

நாள் 23—2—89

# ஆசியுரை

காரைக்குடி நகரத்தார் நகரச் சிவன் கோயிலில் அண்மையில் மகாகும்பாபிடேகம் நடைபெறவுள்ளமையும் அச்சிறப்பு நினைவு என்றும் குன்றாது நிலவி இன்பஞ் செய்ய விழாமலர் மலரவுள்ளமையும் அறிய மகிழ்ச்சி.

விழா நல்லவண்ணம் இனிது நிகழவும், விழாமலர் தெய்வத் தமிழ்மனம் கமழமலர்ந்து உலகு இன்புறவும் நம் ஆன்மார்த்தமூர்த்தியாகிய ஸ்ரீ ஞானமா நடராஜப் பெருமான் திருவடிமலர்களைச் சிந்திக்கின்றோம்.

பெறுநர் :-

டாக்டர். **வெ. சு. அழகப்பன் அவர்கள்**

பதிப்பாசிரியர்

கும்பாபிஷேக மலர்க்குழு

நகரத்தார் நகரச்சிவன் கோவில்

**காரைக்குடி.**

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமை ஆதீனம்
26 ஆவது குருமகாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்**

**தருமபுரம்**

மயிலாடுதுறை (அஞ்சல்) 609 001.

23 – 2 – 1989

''ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும்எம் ஆதியே''

ஆலயம் என்பதற்கு கடவுளின் திருவடி இன்பத்தில் ஆன்மா லயப்படுதற்குரிய இடம் என்பது பொருள். இத்தகைய ஆலயங்கள் ஆகமங்களையொட்டி நம் நாட்டில் நிர்மாணம் செய்யப் பட்டுள்ளன. நம் உடலில் தலை, கழுத்து, மார்பு, நாபி, பாதம் என்ற பிரிவுகள் உள்ளனபோல ஆலயத்திலும் இவ்வமைப்பில் கர்ப்பக்கிருகம், அர்த்த மண்டபம் மகாமண்டபம் யாகசாலை, கோபுரம் ஆகியன உள்ளன.

சிவாலயத்தில் லிங்கம் என்பதற்குக் குறி அல்லது அடை யாளம் என்பது பொருளாகும். காணமுடியாத இறைவனைக் காணுவதற்குரிய அடையாளமாக விளங்குவது சிவலிங்கம்.

'காணுத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாக
நீணுதம் அணிந்தார்க்கு நிகழ்குறியாம் சிவலிங்கம்'

என இச்சிவலிங்கம் குறிக்கப்படுகிறது. இத்தகைய ஆலயத்தை வலம் வந்து சிவலிங்கப் பெருமானனை வழிபடுவது இம்மை வாழ் விற்கும் மறுமை இன்பத்திற்கும் துணைபுரியும்.

தலபுராணங்களில் தேவர்கள் முதல் எறும்பு வரை அனைத் துயிர்களும் மண்ணுலகில் சிவபிரானை வழிபட்டு அருள் நலங்கள் பெற்றதைக் காண்கிறோம். இவ்வுலகிற் பிறந்த மக்கள் இத்தகைய சிவ வழிபாடுகளைப் புரிந்து கடைத்தேறவேண்டும் என்பதுதான் அப்புராணங்களின் அடிப்படை நோக்கம் என்பதை அனைவரும் அறிதல் வேண்டும். 'இப்பூமி சிவனுய்யக் கொள்ளும் இடம்' எனக் கூறுகிறார் மணிவாசகர்.

சிவ வழிபாட்டுக்கு மேலான வழிபாடு இல்லை என்பர் பெரியோர். இத்தகைய சிவ வழிபாட்டை அன்பர்கள் பலரும் செய்கின்ற வகையில் காரைக்குடி நகரத்தார் நகரச்சிவன் கோயிலை நிறுவி இதுபோது திருப்பணிகளுடன் மகா கும்பா பிஷேகம் செய்விக்கின்றனர்.

விழாச் சிறப்புற நிகழவும், விழாமலர் நன்கு மலர்ந்து பயன் தரவும் செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

அனுப்புநர்

**திருப்பெருந்திரு. காசி விசுவநாத ஞானதேசிகர் அவர்கள்**

**கோவிலூர் மடாலயம்**

பெறுநர்

**காரைக்குடி நகரத்தார் நகரச் சிவன்கோவில்**

**கும்பாபிஷேக மலர்க்குழு**

பரங்கருணைக் கடலாகிய சிவபெருமான் அம்பாள் எழுந்தருளியுள்ள காரைக்குடி நகரச்சிவன்கோவிலில் நாளது வருஷம் பங்குனி மாதம் 28ந்தேதி நடைபெற உள்ள குட முழுக்கு விழாவும் எம்மை ஆட்கொண்டு நடாத்திச் செல்லும் கொற்றவாளீஸ்வரர் திருநெல்லை அம்பாள் திருவருளால் சீரும் சிறப்புடன் நடைபெற வேணுமாய் ஆசி கூறுகின்ளோம். குடமுழுக்கு விழாவின் பயனுக மும்மாரி மழைபெய்து எல்லா மக்களும் நல்வாழ்வு பெற்றுவாழ்வாங்கு வாழ வாழ்த்துகின்ளோம்.

இப்படிக்கு,

**காசிவிசுவநாத ஞானதேசிகர்.**

உ

சிவ சிவ

தன் கடன் அடியேனையும் தாங்குதல்

என் கடன் பணி செய்து கிடப்பதே


**தவத்திரு**

**குன்றக்குடி அடிகளார்**

**குன்றக்குடி-623206.**

பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டம்

தமிழ் நாடு

தொலைபேசி : குன்றக்குடி 27


நாள் 17—2—89

அன்பிற் சிறந்த நமது திரு. டாக்டர் **வெ சு. அழகப்பன்** அவர்களுக்கு எல்லா நன்மைகளும் பெருக, திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்,

காரைக்குடி நகரச்சிவன்கோயில் பெருஞ்சாந்தி விழாக் கொள்ளவிருக்கும் செய்தி மகிழ்வைத் தருகிறது. காரைக்குடி நகரச்சிவன்கோயில் அழகுற அமைந்த திருக்கோயில், திருக்கோயில்கள் திருப்பணி செய்வதும் பெருஞ்சாந்திவிழா எடுப்பதும் சிறந்த அறமாகும். **"பெருஞ்சாந்தி காணாமல் போதியோ பூம்பாவாய்!"** என்று திருஞானசம்பந்தர் அருளியுள்ளமை அறியத்தக்கது. காரைக்குடி நகரச்சிவன்கோயில் எழிலுற—புதுமைப் பொலிவு பெற்று விளங்க திருவாளர் சா.நா. அ. சொ. **அண்ணாமலை** செட்டியார் அவர்கள் தலைமையில் அமைந்த திருப்பணிக்குழு, திருப்பணி செய்து திருவருட்பொழிவு பெறப் பெருஞ்சாந்தி விழாவும் எடுக்கும் செய்தி சிந்தனைக்கும் செவிக்கும் இனிக்கும் செய்தி, பெருஞ்சாந்திவிழா இனிதே நிறைவெய்த, திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

இன்ப அன்பு,

**அடிகளார்**

திரு. டாக்டர் **வெ. சு. அழகப்பன்** அவர்கள்
8. ப. அ. லெ. தெரு,
காரைக்குடி - 623 001.

உ

முருகா

அனுப்புநர்

**திரு. கிருபானந்தவாரியார்**
**திருச்செந்தூர்**

பெறுநர்

டாக்டர் **வெ. சு. அழகப்பன்** அவர்கள்
8. ப. அ. லெ. தெரு,
காரைக்குடி - 623 001.

## வாழ்த்து

கோலமிகு காரைக் குடிநகரச் சம்புவை
சீலமுடன் போற்றியன்பு செய்தோர்கள் – ஞாலமதில்
எல்லா நலன்களும் எய்தியே இன்பமுடன்
பல்லாண்டு வாழ்வார் பணைத்து

அன்பன்,

**கிருபானந்தவாரியார்**

கும்பாபிடேகக் காட்சி



# கும்பாபிடேகக் குழு — 1989



தலைவர்

சா. நா. அ. சொ. அண்ணமலை செட்டியார்



துணைத்தலைவர்

ராம. வீர. பெரி.

பெரியகருப்பன் செட்டியார்



துணைத்தலைவர்

சா. லெ. நா.

சாத்தப்ப செட்டியார்

# கும்பாபிடேகக் குழு



செயலர்
மெ. செ. ச. மு. மெ.
முத்துராமன் செட்டியார்



செயலர்
நா. மெ. சி. சேவு.
மெய்யப்ப செட்டியார்



பொருளாளர்
கதி. ராம. சோம.
அண்ணாமலை செட்டியார்



திருக்கல்யாண மண்டபக் கொடைஞர்
ராம. வீர. ராம.
ராமசாமிச் செட்டியார்

# மலர்க் குழு



தலைவர்

அ. திருநாவுக்கரசு



செயலர்

முத்து. பழநியப்பன்



இணைச் செயலர்

சா. நா. நா. நாராயணன்



பதிப்பாசிரியர்

டாக்டர். வெ. சு. அழகப்பன்

## நகரச்சிவன் கோவில் நடப்புக்
## காரியக்காரர்கள்



அ. முரு. நாகப்ப செட்டியார்



சிவ.கி.லெ.கி.
வெங்கிடாசலம் செட்டியார்



வயி. சொக்கலிங்கம் செட்டியார்

## கும்பாபிடேகத் திருப்பணிக்கு உதவியவர்கள்

சா. நா. அ. சொ. அண்ணமலை செட்டியார்
ராம. வீர. ராம. ராசாமி செட்டியார்
சா. நா. அ. அழ. குடும்பத்தார்
அ. மு. க. குடும்பத்தார்
ராம. வீர. பெரியகருப்பஞ் செட்டியார்
க. தெ. க. அள. அ. குடும்பத்தார்
மெ. மெ. சி. சேவு. குடும்பத்தார்
சா. லெ. நா. சாத்தப்ப செட்டியார்
மு. ராம. சொ. பெரி சொக்கலிங்கம் செட்டியார்
சா. ராம. சா. நாராயணன் செட்டியார்
சுப. மு. நா. வீர. குடும்பத்தார்
சுப. சு. ராம. சுப. குடும்பத்தார்
சுப. சு. சு. சுப. குடும்பத்தார்
அ. உ. மெ. பழ. குடும்பத்தார்
மெ. செ. மெ. மெ. குடும்பத்தார்
ராம. வீர. சிதம்பரம் செட்டியார்
முரு. லெ. ராம. நாராயணன் செட்டியார்
சிவ. மெ. பொது
பழ.சு. பழ. குடும்பத்தார் & பழ.நா.குழ. குடும்பத்தார்
பஞ்சு அருணசலம்
பழ. நா. முத்தையா செட்டியார்
சா. நா. நாராயணன் & சா. நா. நா. நாராயணன்
வெ. சோம. ராமசாமி செட்டியார்
சு. ராம. தெ. முருகப்ப செட்டியார்
மெ. செ ராம. மெய்யப்ப செட்டியார்
ப. சு. ராம. அண்ணமலை செட்டியார்
மெ. வீர. பிரைவேட் டிரஸ்ட்
மு. அ. சுப. அண்ணமலை செட்டியார்
க. அள. ராம. கரு. ராம. குடும்பத்தார்
ராம. வீர. பெரி. வீரப்ப செட்டியார்
ஆறு. பள. சி. பள. குடும்பத்தார்
மெ. செ. ச. குடும்பத்தார்
ஆவி. ப. முரு மு முரு. லெ. முருக்கப்ப செட்டியார்
முத்து. பழநியப்பன் & வயி, கருப்பன் செட்டி

ஆவி. ப. முரு, மு முரு குடும்பத்தார்
A. V. M. சாரிட்டீஸ்
ஆத. சேவு. பழ வெள்ளையப்ப செட்டியார்
ஆத. மெ. ராம. மெ. ராம. மெய்யப்ப செட்டியார்
சா. அரு. மெ. அருணசலம் செட்டியார்
வெ. ராம. பொது
அ. உ. மெ. ராம. கிருஷ்ணன் செட்டியார்
சித. நா. வெ. மெய்யப்பன் ஆக்ஸ்போர்டு
காரைக்குடி ப. ராம. குடும்பத்தார்
கும.சொ. குமரப்ப செட்டியார்
சுப. ராம. நா. நாச்சியப்பசெட்டியார்
அழ. பழ. பழநியப்ப செட்டியார்
அரு. சா. அரு. குடும்பத்தார்
ஆத. ராம. சு. ராம. சுப்பிரமணியன் செட்டியார்
சுப. சித. பழநியப்பன்
மெ. லெ. மெ. மெய்யப்ப செட்டியார்
சா. நா. சா. பொது
அரு. மு. மு குடும்பத்தார்
ராம. வீர. பெரி. சண்முகம் செட்டியார்
ராம. வீர. பெரி. பஞ்சநதம் செட்டியார்
SP. முத்துராமன்
மெ. செ. அ. பழ. அ. பழ. பழநியப்ப செட்டியார்
சுப. அரு. சுப. குடும்பத்தார்
சு. கும. பழ. பழநியப்பன்
வெ. ராம. அ. வெ. சொக்கலிங்கம்
பழ. தெ. லெ. தேனப்ப செட்டியார்
பழ. அ. பழ அ. தேனப்ப செட்டியார்
ஆ. சொ. குடும்பத்தார்
கரு. கதி. கருப்பஞ் செட்டியார்
சி. மு. அரு. குடும்பத்தார்
ரெ. முத்துக்கணேசன்
முத்து. ராம. மு. ராம. மகாலிங்கம்
பெரி. க. குடும்பத்தார்
சா. நா. ராம. நா. நா. நா. குடும்பத்தார்
கரு. கதி சுப. கருப்பையா
மு. ராம. சொ. வீர. முத்துக்கருப்பஞ் செட்டியார்
மெ. நா. மு.
அள.சா.அள. கதி.ராம.சோம. அண்ணாமலை செட்டியார்

பழ. செ. மு. ராமையா செட்டியார்
அள. அ. நா நாராயணன் செட்டியார்
ராம. வெ. ராம. குடும்பத்தார்
மெ. அ. மெய்யப்ப செட்டியார்
பழ. தெ. ராம. தேனப்ப செட்டியார்
வை. ராம. திருப்பதி செட்டியார்
சா. நா. சா. நா.
பழ. முருகப்பன்
ஜமீன் சுப (மெடிக்கல் யூனியன்) குடும்பத்தார்
அ. மெ. அ. அ. அண்ணமலை செட்டியார்
அ. மெ. அ பழ. அண்ணமலை செட்டியார்
அ. ராம. வெ வெ. சுப்பையா செட்டியார்
பெரி. ராம. விஸ்வநாதன் & R. M. சொக்கலிங்கம்
பழ. அ. அ. பழநியப்ப செட்டியார்
ராம. கு. ராம. பழ. மா.
நா. நா. மு. நாராயணன் செட்டியார்
நா. நா. மு. மெய்யப்ப செட்டியார்
மு. வெ. தெ. வெங்கிடாசலம் செட்டியார்
வெ. பெரி. வெ. சு. அழகப்பன்
முத்து வெ. சொ. குடும்பத்தார்
சி மெ. சோம. சுப.
சு. மெ. மெ. பழ. சண்முகம் செட்டியார்
நா. வெ. மெ. ராம. ராமநாதன் செட்டியார்
சி. ப. சித மா குடும்பத்தார்
மெய. ஆ அ. நா. அண்ணமலை செட்டியார்
திருவையாறு சி. நா. அன்னச்சத்திர அறக்கட்டளை
காரைக்குடி நா. நா வகை
மு. மெ மு. முத்தையா செட்டியார்
அள. அ. அள அளகப்ப செட்டியார்
கரு. கும. மீ. மயில் அண்ணமலை
ப. ராம. சிவ. நா. வீரப்ப செட்டியார்
கரு. கதி. ச. குடும்பத்தார்
சுப. சு. மு. மெ குடும்பத்தார்
சா. நா. ராம. சு. சுப்பிரமணியன் செட்டியார்
மீ. மீனாட்சிசுந்தரம் செட்டியார்
அ. தெ. மு மு. ந. சோம. (சிங்கப்பூர்)

## சந்நதிகளுக்குச் சலவைக்கல் பதித்து உதவியோர் :-

| | சந்நதி | | உதவியோர் |
|---|---|---|---|
| 1. | மாடவிநாயகர் சந்நதி | | நா. நாராயணன் (பேரா) |
| 2. | ,, தண்டாயுதபாணி ,, | | நா. நா. ப. ந. ப. குடும்பத்தார் |
| 3. | சுவாமி சந்நதி | : | சா. அரு. நா. அரு. அருணசலம் செட்டியார் |
| | | | டாக்டர். வெ. தெ. மாணிக்கம் |
| | | | அ. உ. மெ. நா. மெய்யப்பன் |
| | | | ஆரு. ஆ. ராம. சொ. ராம. அருணசலம் |
| | | | நா. சித. நா. சிதம்பரம் |
| 4. | அம்பாள் சந்நதி | : | சா. நா. அ. அழ. சொ. அழ குடும்பத்தார் |
| 5. | நடராசர் சந்நதி | : | பழ. அ. குடும்பத்தார் பழ நா. குழ குடும்பத்தார் |
| 6. | சுந்தர விநாயகர் சந்நதி | | கும்பாபிடேகக்குழு |
| 7. | சுப்பிரமணியர் | : ,, | முரு. லெ. ராம. நா. குடும்பத்தார் |
| 8. | மகாலெட்சுமி | : ,, | அண. அ. குடும்பத்தார் |
| 9. | காசிவிசாலாட்சி | : ,, | நா. நா. வகை பங்காளிகள் |
| 10. | சோமாஸ்கந்தர் | : ,, | கும்பாபிடேகக்குழு |
| 11. | வைரவர் | : ,, | கரு. கதி. கரு. குடும்பத்தார் |
| 12. | நவக்கிரகம் | : ,, | மெய. மெ. குடும்பத்தார் |
| 13. | திருக்கல்யாண முன்மண்டபம் | | ராம. வீர. ராம. இராமசாமிச் செட்டியார் |

### வாழ்வியல் நெறி

1. எழ்மையில் நேர்மை வேண்டும்
2. கோபத்தில் பொறுமை வேண்டும்
3. தோல்வியில் முயற்சி வேண்டும்
4. வறுமையிலும் உதவ வேண்டும்
5. துயரத்தில் துணிவு வேண்டும்
6. செல்வத்திலும் எளிமை வேண்டும்
7. பதவியிலும் அன்பு—பணிவு வேண்டும்.

### விழுங்கல்களென அறிவீர்

அறம் — நோயை விழுங்கும்
கவலே — வயதை விழுங்கும்
வழிபாடு — துன்பத்தை விழுங்கும்
சோரம் செய்தல் — செல்வத்தை விழுங்கும்
பொய் — எல்லாவற்றையும் விழுங்கும்

— முத்துபழநியப்பன்

# சிவகங்கைச் சீமையில் நகரத்தாரின் தெய்வப் பணிகள்

தவத்திரு குன்றக்குடி அடிகளார்

நகரத்தார்கள் இன்று உலகம் தழுவிய நிலையில் வாழ்கின்றனர். பழங்காலத்தில் நகரத்தார் சமூகம் பூம்புகார்ப் பகுதியில் வாழ்ந்ததாக ஒருசில வரலாற்றுசிரியர்கள் கூறுவர். பின்னே அவர்கள் குடிபெயர்ந்து நிலையாக வாழும்பகுதி சிவகங்கைச் சீமையாகும். அதாவது இன்றைய பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டமாகும்.

நகரத்தார்கள் நாள்தோறும் இறைவழிபாட்டில் தவறாது ஈடுபடும் பழக்கம் உடையவர்கள் உண்பதற்குமுன் மலர் பறித்திட்டு உண்ணுதல் என்ற அப்பரடிகள் அறிவுரையை இன்று நடைமுறையில் கடைப்பிடித்து ஒழுகும் சமூகம் நகரத்தார் சமூகமேயாகும். அதுபோலவே சோழர்காலத்தில் இருந்த கோயிலை மையமாகக்கொண்ட சமூகவாழ்க்கையை இன்றும் உயிர்ப்புடன் கடைப்பிடித்து ஒழுகி வருவது நகரத்தார் சமூகமேயாகும். நகரத்தார்கள் ஒன்பது வகை உட்பிரிவுகளைக் கொண்டுள்ளனர். இந்த ஒன்பது பிரிவுகளும் திருக்கோயில்அடிப்படையிலேயே அமைந்துள்ளன. இந்த ஒன்பது திருக்கோயில்களும் சிவகங்கைச் சீமையில்தான் அமைந்துள்ளன. இந்தத் திருக்கோயில்களில் தலைமுறை வளர்ச்சியில் எழும்புள்ளிகள் பதியப்பெறுகின்றன. திருக்கோயில்களுக்கும் புள்ளிவரி தரும் பழக்கம் இருந்து வருகிறது. திருமணங்கள் செய்யும்போது திருக்கோயிலுக்கு முதற்பாக்கு. திருக்கோயில் மாலை வாங்கியே திருமணம் செய்கிறார்கள். தங்கள் சமூக திருக்கோயில்களைத் தாங்களே சுழற்சி முறையில் நிர்வாகம் செய்கின்றனர், தொண்டு செய்கின்றனர். ஆண்டுதோறும் குறிப்பிட்ட நாளில் திருக்கோயில் சபை கூடுகிறது. வரவு—செல்வுக் கணக்குகள் ஆய்வு செய்யப் பெறுகின்றன. நிர்வாகம் ஆண்டுதோறும் மாறுகிறது. அற்புதமான பழைய வரலாறு புத்துயிர்ப்புடன் இயங்குகிறது.

சிவகங்கைச் சீமையில் நிறைய திருக்கோயில்கள் உள்ளன. திருக்கோயில் இல்லாத ஊர்களே இல்லை. நகரத்தார்கள் சமூக அடிப்படையிலான திருக்கோயில்கள் போகத் தாங்கள் வாழ்கிற ஊர்களில் எல்லாம் திருக்கோயில் கொண்டுள்ளனர். எல்லாத் திருக்கோயில் களுமே கருங்கல் திருப்பணி-பேயாம். சிவகங்கைச் சீமையில் பாடல்பெற்ற நான்கு திருக்கோயில்கள் உள்ளன. அவையாவன. திருப்பூவனம், திருக்கானப்பேர், திருப்புத்தூர், திருக்கொடுங்குன்றம். இந்த நான்கு திருக்கோயில்களிலும் கருங்கல் திருப்பணி செய்து அழகுற அமைத்துள்ளனர் நகரத்தார்கள். இவற்றுள்ளும் திருக்கானப்பேரில் மிக அழகாகத் திருப்பணி செய்யப்பெற்று அழகுற அமைந்த தெப்பக்குளமும் உண்டு. சிவகங்கைச் சீமையில் அழகுற அமைந்து விளங்கும் திருக்கோயில்கள், நகரத்தார்களின் சமயபணிக்கு—திருக்கோயில் தொண்டுக்கு வரலாற்றுப் புகழுடைய சான்றுகள்.

கற்கோயில் திருப்பணி மட்டுமல்லாமல் சொற்கோயில் திருப்பணிகளும் நகரத்தார்கள் செய்துள்ளனர். பாடுவார் முத்தப்பச்செட்டியார் திருமுறைச்செல்வர் சொ., திருவாசகம் கதிர்மணி விளக்கவுரை ஆசிரியர் பண்டிதமணி

சிவநெறிச்செல்வர் ராய சொ., திருக்கோயில் கலைவிளக்கப்புலவர் சா. கணேசன் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

செந்தமிழும், சிவநெறியும், திருக்கோயில்களையும் வழிபாடும் இன்றும் சிவகங்கைச் சிமையில் நின்று நிலவுவதற்கு நகரத்தார்கள் ஆற்றிய பணி புகழுடையது. இறைவன் திருவருளால் நகரத்தார்கள் என்றும் வழிவழி சிறந்து விளங்கி வாழ்வார்களாக! நகரத்தார்கள் சென்ற காலத்தில் ஆற்றிய பழுதிலாப்பணிகளுக்கும் பாராட்டுக்கள்! வாழ்த்துக்கள்! இனி வருங்காலத்தில் ஆற்றவிருக்கும் சிறப்புமிக்க பணிகளுக்கு வரவேற்பு. ★

---

## நகரத்தார் ஊக்கம் மிக்கார்

**உத்தமராம் தனவணிகர் குலத்துதித்த**
**இளைஞர்பலர் ஊக்கம் மிக்கார்**
**உண்மையேதாரகம் என்று உணர்ந்திட்டார்**
**அன்பு ஒன்றே உறுதி என்பார்**
**வண்மையே குலதர்மமெனக் கொண்டார்**
**தொண்டொன்றே வழியாக் கண்டார்**
**ஒண்மையுயர் கடவுளிடத் தன்புடையார்**
**குலமுயற நகருயர; நாடுயர உழைக்கின்றார்.**

**மகாகவி பாரதியார்**

---

## ஆலயத்தில் செய்யத்தகாதவை

1. வேகமாக வலம் வரக்கூடாது.
2. முடிந்தவரை வெறும்பேச்சும் பேசக்கூடாது.
3. கூலிங்கிளாசு கைலி அணிந்து உள்ளே செல்லக்கூடாது
4. வெற்றிலைப் போட்டுக்கொண்டு உள்ளே செல்லக்கூடாது.
5. போர்த்திக்கொண்டு செல்லக்கூடாது. மேல்துண்டை இடுப்பில் கட்டவேண்டும்.
6. மூர்த்திகளைத் தொடக்கூடாது. அருகில்கற்பூரம் ஏற்றக்கூடாது
7. உள்ளே எச்சில் துப்பவோ அசுத்தம் செய்யவோ கூடாது.

கவிச் செம்மல்
டாக்டர் ரெ. முத்துக்கணேசன்
கல்லுக்கட்டி மேற்கு, காரைக்குடி-623 001. தொலைபேசி எண் 2821

விபவ மாசி 16
27—2—89

# காரைக்குடி
# அருள்திரு மீனாட்சி சுந்தரேசுவரர்
# குடமுழுக்கு நாள் வாழ்த்து

1 மணப்பானை பூக்கள் தோறும்
மணம்கனிந்து கசிவார் தம்மை
இணைப்பானை, அஞ்செழுத்தை
இதயத்தால் அரற்று வாரை
அணைப்பானை, ஒன்றிக் காக்கும்
அம்மை மீனாட்சி யோடு
புணர்ப்பானைப் புனிதன் தன்னைச்
சுந்தரனைப் போற்று வோமே.

2 செந்தீயின் உருவா னனைச்
சிற்றுயிர்பால் அறிவா னனைக்
சுந்தழியைப் படைக்கக் கல்லில்
கலைச்சிற்பி செதுக்கு மாபோல்
பந்தவினைத் துன்பம் தோற்றிப்
பக்குவமாய் ஞானம் ஈயும்
சுந்தமலர்க் கோதை பங்கன்
கண்ணுதலைப் பரவுவோமே.

3 தென்காரைக் குடியில் வாழும்
திருப்பணி செய் நகரத்தார்கள்
தென்மறையால் வேதச் சொல்லால்
செபித்தநற் புனலை வார்த்துப்
பொன்ஒளியாய்ச் செய்த கோயில்
புகுந்தானை, உவந்து நாளும்
நன்மைசெய் நாதத் தானை
நம்சிவனை வாழ்த்து வோமே.

தொலைபேசி : 824

**பொன்முடி பதிப்பகம்**

123, முத்துப்பட்டணம் மூன்றாம் தெரு,
காரைக்குடி.
பசும்பொன்முத்துராமலிங்கம் மாவட்டம்

உ
''காசிஸ்ரீ''
'கவிஞர்கோ'' ''பொற்கிழிக் கவிஞர்''
**அரு. சோமசுந்தரன்**, எம்.ஏ., பி.டி.

1 அருள்பொழியும் மீனாட்சி சுந்தரேசர்
அடிக்கமலம் தொழுது நின்றால்
இருள் விலகும்; வாழ்க்கையிலே இன்பஒளி
எந்நாளும் எய்தி இருக்கும்;
பொருள்பெருகும்; ஆரோக்கியம், தொழிலோடு
புகழ்எல்லாம் பொருந்தி நிற்கும்
உருள்கின்ற செல்வமெலாம் குடும்பத்தில்
ஒட்டுறவாய் உய்வு காட்டும்!

2 காரைநகர் மாந்தரெலாம் உய்வுபெறக்
கடைக்கண்ணால் அருள்பா லித்தே
ஊரையெலாம் காக்கின்ற உயர்தமிழே!
மீனாட்சி! உன்றன் பாதம்
பாறையெனும் மனமுடையார் பற்றிடினும்
தள்ளாமல் பரிவு கொண்டு
கூரையுடன் காத்திடுக! குலம் வளர்க்கும்
நாயகியே! குறளின் செல்வி!

3 மந்திரங்கள் சொன்னாலும் மாவேள்வி
செய்தாலும், மனத்தால் உன்னைச்
சுந்தரேசா! எனச்சொன்னால் சொர்க்கங்கள்
தருகின்ற சொக்கப் பொன்னே!
கந்தையுமே உனைத்தொழுது கதவருகே
நின்றிட்டால் கயிலா யம்தான்
சிந்தையெலாம் கவர்கின்ற காரைநகர்ச்
சுந்தரேசா! சிவனே போற்றி!

———+———

# திருவாசகத்தில் நோக்கு

## 'தமிழண்ணல்'

தமிழ்த்துறைத் தலைவர், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை

### தொல்காப்பியரின் நோக்கு

தொல்காப்பியர், தமிழ் இலக்கியத்திற்கு அளித்த சிறந்த திறனாய்வு அளவு கருவிகளில் ஒன்று 'நோக்கு' என்பது. இவ்விலக்கியக் கோட்பாடு உலக இலக்கியங்கள் அனைத்திலும் ஏற்றிப்பார்க்கத்தக்க ஒரு பெருங்கொள்கையும் ஆகும்.

பேராசிரியர் இதனை அகநானூற்றுப் பாடல் ஒன்றின்மூலம் விளக்கியுள்ளார். அவர் தம் விளக்கத்தின் வழி இக்கோட்பாடு புதிய பரிமாணத்தைப் பெறுகிறது. ஒரு பாடல் அல்லது ஒருநூல் முழுமையுற நோக்கப்பட வேண்டும். முழுமைக்கு அதன் உறுப்புக்கள் இயைபுபடப் பொருந்தியிருத்தலையும், ஒவ்வோர் உறுப்பும் முழுமையின் பொருட்சிறப்புக்கு உதவுதலையும் கண்டறிதலேநோக்காகும்

### திருவாசகத்தில் நோக்கு

திருவாசகத்தில் இந்நோக்கினைக் கொண்டு ஆராய்வார் அதன் முழுமையையும் நன்கு அறிந்து, அன்னதன் உறுப்புகளையும் நுட்பமாய் அறிந்திருத்தல் வேண்டும். திருவாசகம்தேவாரம் அனைய உதிரிப்பாடல்களின் தொகுப்புப் போலாது, மாணிக்கவாசகரின்வரலாறு தழுவிய ஒரு காப்பியப் பனுவல் போல் திகழ்கிறது. அது, சமயம்சார்ந்த பக்தி நூலேயாயினும் அதனுள் 'இலக்கியபாங்கு' மிக மேலோங்கி நிற்பதை இந்நோக்கின்வழி நன்கறியலாம். இந்நூலுள் வரும் ஒவ்வொரு பாடலும்அதன்பிரிக்கவொண்ணாஉறுப்பாய்ப் பொருந்தி, அதன் மொத்தமான பொருட் சிறப்புக்கு உதவுவது அறியத் தக்கதாகும்.

சிந்தனைநின் தனக்காக்கி நாயினேன்தன்
கண்ணிணைநின் திருப்பாதப் போதுக்காக்கி
வந்தனையும் அம்மலர்க்கே ஆக்கி வாக்குஉன்
மணிவார்த்தைக்கு ஆக்கி ஐம்புலன்கள் ஆர
வந்துஎனைஆட் கொண்டுஉள்ளேபுகுந்தவிச்சை
மாலமுதப் பெருங்கடலே மலையே உன்னைத்
தந்தனைசெந் தாமரைக்காடு அனைய மேனித்
தனிச்சுடரே இரண்டுமிலித் தனிய னேற்கே
(திருச்: 26)

இப்பாடலின் கருத்தே திருவாசக கருத்துமாகும். எவ்வாறு?

### விச்சை

விச்சை என்ற சொல்வித்தை என்பதன் மரூஉ ஆகும். சிவபெருமான் செய்த வித்தையைமாணிக்கவாசகர் மறக்கவில்லை. அதுதான் அவரிடம் பெருமாற்றத்தை—பிறவி மாற்றமனைய பெருமாற்றத்தை விளைவித்தது. எனை ஆட்கொண்டு உள்ளே புகுந்தவிச்சை' என்று குறிப்பிடுகிறது. திருப்பெருந் துறையில் குருந்தமரத்தடியில் சிவபெருமான் ஞானாசிரியனாக எழுந்தருளி திருவைந்தெழுத்தை உபதேசித்து, திருவடித் தீக்கை செய்தருளினார். அக்கணமே வாதவூரர் பற்றனைத்தும் முற்றத் துறந்த ஞானியானார். அவமான இப்பிறவி நீங்கிச் சிவமானார் என்றே கூறவேண்டும். அவர் குதிரை வாங்க வந்த பொன்னைக் கொண்டு செய்த சிவ புண்ணியச் செயல் குறித்து உலகம் அவரைத் தூற்றியதும் உண்டு; மன்னன் தண்டித்ததும் உண்டு.

அப்போதெல்லாம் அவர் இறைவன் தம்மிடம் நடத்திய ஞான நாடகத்தையே எண்ணி எண்ணி வியப்பாராயினர். 'நகவேதகும் எம்பிரான் என்னை நீ செய்த நாடகமே' (5 : 10) என்பார் மாணிக்கவாசகர்.

இறைவனைப் பிரிந்ததாலாகிய அவலமே பெரும்பகுதிப் பாடல்களுள் இடம்பெற்று, திருவாசகத்தைப் பயில்வார் அனைவரும் உருகும்படி ஆயிற்று. மேற் சுட்டிய திருவாசகத் திருச்சதகப்பாடலுள் 'எனை ஆட்கொண்டு உள்ளே புகுந்த விச்சை' என்ற தொடர் இங்ஙனம் திருவாசகத்துட் பொருளாதலை 'நோக்கி' அறிவார்க்கு, அந்நூலின் தனிச் சிறப்புப் புலனாகும்.

## வந்து

அடுத்து அப்பாடலுள் ,ஐம்புலன்கள் ஆர வந்து' எனவரும் தொடர் கருதத் தக்கதாகும் 'வந்து' என்றசொல், திருவாசகத்துள் ஒரு வினைப்படிமமாகச் செயற்படுகிறது. இறைவன் மாணிக்கவாசகர்க்குத் தானே 'வந்து' ஆட்கொண்டான்; எதிர்பாராது வந்து ஆட்கொண்டான்; அவர் முன்பாக எவ்வித அறிய முயற்சியையும் மேற்கொள்ளாதிருக்கவும் அக்கடவுள் தானாக உலகின்கண் வந்து அவரை ஆட்கொண்டான்.

எரிவந்த, புகுந்தருளி, வந்திழிந்து என்றெல்லாம் திரும்பத் திரும்ப வரும் தொடர்கள் பலவும் இவற்றோடுஒப்பிட்டுச்சிந்திக்கத்தக்கன 'வான் பழித்து இம்மண் புகுந்த' வள்ளலாகிய இறைவனை நினைத்து நினைத்து ஒலமிடுவதே திருவாசகம். அந்த ஒலியினைப் பல் வேறுபாடல்களில்ஒலியும் எதிரொலியும்மாய்க் காணும்போது, நமக்குத் திருவாசக உண்மை புலனாகிறது. தாய் மகவைத்தேடி வந்து, பாலூட்டிப் போற்றுதல்போலவே இறைவனும் நடந்து கொள்வார் என்ற தத்துவமே இவ்வினைப் படிமத்தின் (symbol) பொருளாகும்

குருந்தமரத்தடியில் வந்த ஞானமுனிவன் செம்மேனி அம்மானாகக் காட்சியளித்தான். மனிதவடிவில் வத்த கடவுள் என்பதே வாசகர் கருத்து. இங்ஙனம் மானிடனாக எரிவந்த காட்சியை அவர் நினைவு கூறுமிடங்கள் பலவாகும். செம்மேனி முழுவதும் வெண்ணீறு பூசி வந்தாராம்.

அவர் தம் கண்ணுள் நிற்கும் இந் 'நிரம்ப அழகியரை, நித்தமணாளரை' நினைந்து நினைந்து உருகுகிறார். 'செந்தாமரைக்காடு அனையமேனி' எனவும் 'தனிச்சுடர்' எனவும் கூறும் தொடர்கள் இக்காட்சிப் பதிவையே வெளிப்படுத்துவன. மாணிக்கவாசகர் தம் நினைவிலும் அவர்தம்பாடல்களிலும் மனித உருவில் வந்த ஞானகுருவே நிறைந்துநிரம்பி நிற்கக் காண்கிறோம். குருவின் வழியாகவே இறைவனைக்காணும் காட்சியே இப்பாடலிலும் அமைந்துள்ளது.

## இரண்டுமிலித் தனியன்

தமக்கு அறிவும் அனுபவமும் இல்லை என்பதை அவர் இவ்வாறு கூறிக்கொள்கிறார். 'கற்றறியேன் கலை ஞானம்' கசிந்துருகேனாயிடினும்' (38.5) என்பதும் அவர்வாக்கு. 'எட்டினோடு இரண்டும் அறியேனையே! (5:49) என்பதும் காணலாம். ''அடிகள்...... பல இடங்களிலும் நூலறிவும் அநுபவ உணர்வும் இல்லாதவன் எனத் தம்மைக் கூறிக் கொள்வராதலின் '' என்பது பண்டிதமணியாரின் விளக்கம்.

## உன்னைத் தந்தனை

இறைவன் தன்னைத் தமக்குத் தந்து தம்மை ஆட்கொண்டதால் அந்நன்றியை

அடிகள் பாராட்டிக் கூறுமிடம் பலவாகும். 'தந்தது உன்தன்னைக் கொண்டது என் தன்னைச் சங்கரா ஆர்கொலோ சதுரர்?'' (22:10) அவர் வினவுவதையும் காணலாம்.

## மணி வார்த்தை

இறைவனுடைய 'பொருள்சேர் புகழைக்' கூறுவதாலேயே, வார்த்தை மணிவார்த்தை ஆகிவிடுகிறது. அதனாலேயே வாசகரும் மாணிக்கவாசகர் ஆனார்போலும். 'மாசில் மணியின் மணிவார்த்தை, பேசிப் பிறப்பறுத் தேன்' (48:7) என்பதில் இதன் விளக்கத்தைக் காணலாம்.

இங்ஙனமே நுட்பமாய்த் தேடத்தேட முன்பு காட்டிய 'சிந்தனை நின்தனக்காக்கி' எனத்தொடங்கும் திருச்சதகப் பாடற் சொல் லாட்சியும் கருத்தும் நூன்முழுதும் இழையோடி நிற்பதைக்காணலாம். இதுநூன்முழுமைக்கும் அதன் உறுப்பாகிய பதிகங்கள் மற்றும்பாடல் களுக்குமிடையேயுள்ள ஒட்டுறவைக் காட்டு கிறது. இத்திருச்சதகப் பாடலையே, மேலே காட்டியவாறு சில கருத்தலகுகளாகப் பகுக்க லாம்.

1. இறைவன் ஒரு விச்சை செய்து வாசகரை ஆட்கொண்டான்
2. அவ்விச்சையில் அவன் நேரே ஐம்புலன் கள் ஆரவந்துதோற்றினன்; தன்செந்தாமரை காடனையதிருமேனி காட்டினன்; இரண்டு மிலித் தனியனாகிய அவருக்குத் தன்னைத் தந் தான்
3. அவர்தம் மனம் மொழி மெய்களை இறைவன் தனதாக்கிக்கொண்டான்.
4. அவ்விறைவன் மாலமுதப் பெருங்கடல் போன்றவன், மலைபோன்றவன், தனிச்சுடராகத் திகழும் திரு மேனியினன்

இக்கருத்தலகுகளால் பெறும் செய்தியும் சொல்லாட்சிகளும் நூன் முழுமையையும் விளக்கவல்ல பொருட்சிறப்புடையன. சுருங் கக் கூறினல் இத்திருப்பாட்டு முற்றிலும் 'நோக்கு' உடையதாய்த் திகழ்கிறது. மேலை நாட்டார் இதனுள் வருவனவற்றை உருக்கள் (Images) படிமங்கள் (symbols) என்பர். இவற்றை உடையவையே கவிதையாகுமென விளக்குவர். அப்பார்வையிலும் இதனுள் 'விச்சை' 'வந்து', 'மணிவார்த்தை' 'தந்து என்பன படிமங்களாகவும் 'மாலமுதப்பெருங் கடல், மலை,' 'செந்தாமரைக்காடு அனைய மேனித் தனிச்சுடர்' என்பன உருக்களாகவும் விளங்கி மாணிக்கவாசகரின் அகவாழ்வைப் புலப்படுத்திக் காட்டுகின்றன.

எனவே 'நோக்கு' இலக்கியத் திறனய் வால் பெறுவது இலக்கிய அனுபவ நுகர்வு எனவும், அதனல் பெறுவது ஆன்ம ஈடேற்றம் எனவும், கொண்டு முறையாகத் திருவாசகத் தை பயிலுதல் வேண்டும்.

---

## இலக்குமியே நீங்காதிரு

காடுவெட்டிப் போட்டுக் கடிய நிலந்திருத்தி
வீடுகட்டிக் கொண்டிருக்கும் வேள்வணிகர் வீடுகட்கு
அன்றைக்குவந்த எங்களம்மா இலக்குமி நீ
என்றைக்கும் நீங்காதிரு.

பாடுவரர் முத்தப்பசெட்டியார்

# காரைக்குடி நகரச்சிவன் கோவில் மாதக்கட்டளைகள்

(முக்கியமானவைமட்டும்)

| | |
|---|---|
| சித்திரை மாதம் | |
| வருடப்பிறப்பு மண்டகப்படி | ஆவி.ப.பொது — இடபவாகனம் |
| கார்த்திகை மண்டகப்படி | பழ.கு.ராம.சுப.அழ. — கேடகம் |
| நடராகர் அபிடேகம் | வெ.பெ.ரி.சா.ரெ |
| வைகாசி | |
| வைகாசிவிசாகம் | ஆவுடையப்ப செட்டியார் வீடு |
| பௌணர்மி சரபேசர் அபிடேகம் | ஆறு.பழ.சி.ப.பழ ப. |
| ஆனி | |
| ஆனித்தெரிசனம் | அ.ராம ராம.ராம. |
| நடராசர் அபிடேகம் | மெ.செ.ச.மு.மெ.மு. |
| பௌர்ணமி சரபேசர் அபிடேகம் | வெ.ராம.சோம.ராம. மீனாட்சி ஆச்சி |
| ஆடிப்பூரம் | ஆவி.லெ.அரு.அரு. |
| ஆவணிமூலம் | அரு.நா நா. சிறிய இடபம். |
| நடராசர் அபிடேகம் | பி.அ.ராம.கா |
| விநாயகர் சதுர்த்தி | அழ.சா.அழ.கதி.முரு.கதி<br>சோம.அன } மூஷிகவாகனம். |
| புரட்டாசி நடராசர் அபிடேகம் | ஆ வி.பு. சபாபதிச் செட்டியார் |
| நவராத்திரி விழா 10 நாள் பற்பலர் | |
| ஐப்பசி தீபாவளி | சொ.நா. |
| கந்தர் சட்டி விழா | மெ.நா.கரு.நாக |
| சூரசம்காரம் | கும.ச.கும.லெ.சுப |
| தெய்வயானைகல்யாணம் | ஆறு.சி.பழ.பழ. |
| வள்ளியம்மை கல்யாணம் | கு.மெ.ராம,சொ. ஞானம்பாள் ஆச்சி |
| திருக்கார்த்திகை | முரு.ராம.ஆவி.ராம.ஆவி. |
| காசிவிசுவநாதர் அன்னபிடேகம் | அழ. வீரப்ப செட்டியார் |
| மார்கழி மார்கழித்தெரிசனம் காப்புக்கட்டு 10 நாள் | மெ.சேவு. சிங்காரஞ் செட்டியார் |
| மார்கழி நடராசர் அபிடேகம் | மெ.சேவு. சிங்காரஞ் செட்டியார்<br>வெ.பெரி.வெ. பொது. |
| தைப்பொங்கல் | திருவையாறு சி நா. அன்னசத்திர அறக்கட்டளை |
| தைப்பூசமண்டகப்படி | மெ.செ.அ.பழ.அழ. |
| மாசி நடராசர் அபிடேகம் | முத்து. அரு. ச். அரு. |
| சிவன்ராத்திரி | பற்பலர் |
| பங்குனி உத்திரம் | ஆறு.பழ.சி.பழ.ப. ருக்குமணியாச்சி |
| சரபேசர் அபிடேகம் | அ.மு.க.மு.சித. |
| நம்பியாண்டார் நம்பி | மெ.செ.மெ.மெ. |

இங்ஙனம் சுமார் 150 கட்டளைகள் நடைபெறுகின்றன. முக்கிய கட்டளைகள் இங்குத்திரட்டப்பட்டன.

# நகரத்தார்களும் சிறுதெய்வ வழிபாடும்

டாக்டர். தே. சொக்கலிங்கம் எம்.ஏ. பி.எச்டி.
இணைப் பேராசிரியர்
அழகப்பா பல்கலைக் கழகம், காரைக்குடி.

## சிவனடியே சிந்திப்போர் :

சிவனடியே சிந்தித்துச் சிவபெருமான் திருப்பணிகள் பல இயற்றிப் புகழ் பெற்றவர்கள் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் என்னும் செட்டியார்கள். இவர்கள் நெற்றி நிறையத் திருநீறும் கழுத்தில் சிவக்கண் மணியும் அணியும் வழக்கினர். ஆயினும் தங்கள் வட்டாரத்திலுள்ள சிறு தெய்வங்களை வழிபடுவதிலும் தனி ஈடுபாடு காட்டுகின்றனர்.

## குலதெய்வமும் படைப்புத் தெய்வமும் :

உயிர்ப்பலி பெறுகின்ற தெய்வங்களைச் சிறு தெய்வம் என்பது பொருந்தும். சிவன் கோயிலில் இடம்பெறாத தெய்வங்கள் பலவும் சிறு தெய்வங்கள் என்ற பிரிவில் அடக்கத் தக்கன. சிறுதெய்வங்களைத், தங்கள் குல தெய்வங்களாகக்கொண்டிருக்கிறார்கள். குல தெய்வங்கள், குலத்தைக்காத்து, ஆபத்துக் காலத்தில் உதவி, செல்வவளத்தையும் தருவன. கோவலனுடைய குலதெய்வம் மணிமேகலை என்று சிலப்பதிகாரம், கூறுவது, இங்கு ஒப்பு நோக்கத்தக்கது நகரத்தார்களிடம் குல தெய்வ வழிபாடு போல, இறந்த முன்னோர்களுக்கு உணவு, உடை,படைத்து வணங்கும் முறையும்உண்டு. இதனை படைப்புத் தெய்வம் என்பர். இப்படைப்பில், குலதெய்வங்களையும் வைத்துச் சிலர்படைக்கின்றனர். இத்தகைய படைப்பில் பங்காளிகள் அனைவரும் ஒன்றுகூடிப் பொதுப் படைப்பு என்றும் படைப்பர். இஃது அன்றித் தனித்தனியே ஒவ்வொரு வீடுகளிலு பம்டைக்கும் படைப்புமுண்டு. இங்கு உயிர்ப்பலி இடம் பெறுதலுமுண்டு.

மக்களாய்ப் பிறந்து படைப்புக் கொள்ளும் தெய்வங்களுக்குக் குலதெய்வக் கோயில்களில் உருவச்சிலையும் காணப்படுகின்றது.

மாத்தூர்க் கண்ணூர்ப் பிரிவு நகரத்தார் சிறுகூடல்பட்டியில் நாராயண சுவாமிக்குப் படைக்கின்றனர். நாராயணசுவாமியின் உருவச்சிலை வயிரவன்பட்டி மக்கமடை அய்யனர் கோயிலில் இருக்கிறது. ஷ நகரத்தார்களில் ஒரு பிரிவினர் கீழச்சிவல்பட்டியில், ஆண்டாத்தாளுக்குப் படைக்கின்றனர். ஆண்டாத்தாள்உருவச்சிலை மக்கமடை அய்யனர் கோயிலில் உள்ளது. மாத்தூர், அரும்பாக்கூர் நகரத்தார் தேவகோட்டையில் நைனப்பையாவுக்குப் படைக்கின்றனர். ஷ உருவச்சிலை, கீழக்கோட்டை அய்யனார் கோயிலில் இடம் பெறுகிறது. இங்ஙனம் படைப்புத் தெய்வத் திரு உருவம், குல தெய்வக் கோயிலிலும் இடம் பெற்றிருக்கிறது. இதனால் படைப்புத் தெய்வமும் குல தெய்வமாக வளருதலைக் காணமுடிகிறது.

## சிறுதெய்வக் கோயில்கள் :

நகரத்தார்கள் வழிபடும்சிறுதெய்வங்கள், செட்டிநாட்டுக்குள்ளோ செட்டிநாட்டை ஒட்டியோ கோயில் கொண்டிருக்கின்றன. பெரும்பாலான கோயில்கள் ஊரை ஒட்டியும் சில காடுகளுக்கு இடையேயும் இருக்கின்றன. இந்தக் கோயில்களில் பல அய்யனரைத் தலைமைத் தெய்வமாகக் கொண்டவை; வேறு

சில, அம்மனைத் (அங்காளம்மன்) தலைமைத் தெய்வமாகக் கொண்டவை. அய்யனார் அல்லது அம்மன் என்ற இரண்டில் ஒன்று தலைமைக் கடவுளாகத்திகழும். வயிரவன்பட்டி மக்கமடை அய்யனர் கோவில், இலங்குடி பகச்சால அய்யனர் கோயில் சாத்தான் கோயில் சாத்தையனர் கோயில், ஆருவயல் செல்லையனர் கோயில், கீழக்கோட்டை ஆதின மிளகி அய்யனர் கோயில் ஆகியவற்றில் அய்யனர் தலைமைக் கடவுளாவார்.

அங்காளம்மனைத் தலைமையாகக்கொண்டவை, இராங்கியம் கருப்பர் கோயில், தெற்கிளையாத்தக்குடி அங்காளம்மன் கோயில் ஆகியனவாம்.

நகரத்தார் வழிபடும் குலதெய்வக் கோயில்கள் கல்லுவயல், கொரட்டி, துவார், சுத்தப்பட்டு, போன்றவை; இவையன்றி வேறு கோயில்கள் இன்னும் பல ஊர்களிலும் இருக்கின்றன.

## தொன்மை வழி பாட்டுமரபு

இந்தக்கோயில்கள், ஊர்மக்கள் அனைவரும் வழிபடும் கிராம தேவதைக் கோயில்களாகும். இச்சிறுதெய்வ வழிபாடு, ஆதிகால வழிபாட்டின் எச்சமாகத் தொடர்கிறது, எறிசோறுஎறிதல், புரவியெடுப்பு, மதுஎடுப்புப் போன்ற பழமையான வழிபாட்டு மரபுகள் இன்றும் இக்கோயில்களில் நிலவுகின்றன.

## நகரக்கோயில்
## ஆவணக் காப்பகம்

நகரத்தார்கள், உறவுமுறைக்காக ஒன்பது கோயில் பிரிவை வகுத்துப் பின்பற்றி வருகின்றனர், திருமணப்பதிவு போன்றவற்றுக்காகத்தான் நகரக்கோயிலுக்குச் சிறப்பும் முன்னுரிமையும் வழங்குகின்றனர். எனவே நகரக் கோயில்கள் பதிவு அலுவலகங்களாக இருக்கின்றன. நகரக் கோவிலுக்குப் போய் சுவாமி கும்பிடுவோர் மிகக்குறைவு. குடமுழுக்கு நாளில்தான் நகரக்கோயிலுக்கு வருகிறார்கள். பலர் தம்வாழ்நாளில் நகரக்கோயிலுக்கே வந்திருக்கமாட்டார்கள். நகரத்தார்களிடம் காணப்படும் சிறுதெய்வ வழிபாடே, இதற்குக் காரணமாகும். குலதெய்வத்தை வழிபட ஆண்டுதோறும் தைமாதம் பங்காளிகள் ஒன்றுகூடிக் கோயிலுக்குச் செல்லுகின்றனர். பொதுப்படைப்புக்குத்தவருமல் கலந்து கொள்ளுகின்றனர். திருமணம் நிறைவேறியபின்னே பிள்ளைபிறந்தாலோ குலதெய்வக் கோயிலுக்கு வழிபட வருகின்றனர். பிள்ளைக்குப் பெயர் குலதெய்வக் கோயிலில்தான் வைக்கின்றனர்.

## வழிபாட்டுத் தொன்மை

சிவ வழிபாட்டிலும் நகரத்தார் பால் சிறு தெய்வ வழிபாடே, அச்சத்தின் காரணமாகப் பெரிதும் காணப்படுகிறது. நகரத்தார்கள் பிள்ளைகளுக்குக் குலதெய்வங்களின் பெயரையே இடுகின்றனர். ஆகையால் சைவசமயிகளாகத்திகழும் நகரத்தார்கள்பால் சிறுதெய்வ வழிபாடு வேரூன்றியுள்ளமையைச் சிந்திக்க வேண்டும்.

சிவன்கோயில்கட்டிப்பழகிய நகரத்தார்கள், சிறுதெய்வக் கோயில்களையும் சிவன் கோயிலைப் போல பெரிதாகவும் எழுப்பினர். இக்கோவில் தூண்களிலும் மண்டபங்களிலும் சிவலிங்கஉருவங்களைச்செதுக்கிசிவபக்தியைக் காட்டினர். நகரத்தார்களின் நடைமுறை வாழ்க்கையில், சிவவழிபாடு சிறப்பிடம் பெற்றிருந்தாலும் அதனினும் ஒருபடி மிகுதியாகவே சிறு தெய்வவழிபாடு இடம் பெற்றிருக்கிறது.

# செட்டிநாட்டுச் சிற்பப் பாணி

**நா. வள்ளி** M.A. B,Ed, D.E.A.,
துணைப்பேராசிரியர்
இராமசாமி தமிழ்க்கல்லூரி, காரைக்குடி.

சைவத்தையும் தமிழையும் இருகண்களாகக் கொண்ட நகரத்தார்கள்கோவிலோடு தங்கள் வாழ்க்கையைப் பின்னிப் பிணைத்து கொண்டவர்கள். இந்துமதத்திற்குக் கோட்டைக் காப்பு வீரர் போன்றவர்கள்' என்று காஞ்சிப்பெரியவரால்பாராட்டப்பெற்ற நகரத்தார்களால் தான் இன்று உலகமெங்கும் இந்த சமயத்தின் பெருமை விளங்குகின்றது. என்பதில் ஐயமில்லை.

மன்னர்கள் ஆட்சி முடிந்த பிறகு கடந்த 200 ஆண்டுகளாக மன்னர் பின்னோரான நகரத்தார்கள், பழையகோவில்களைப் புதுக்கியும், செங்கல் செம்புரான்கல் திருப்பணியாக இருந்தால் கல் திருப்பணியாக்கியும் முகமண்டபம்போன்றவை அமைத்து விரிவுபடுத்தியும் மண்டபத் தூண்களிலும் கருவறை சுவர்களிலும் அழகிய சிற்பங்களைச் செதுக்கியும் வந்துள்ளனர். மேலும்தங்கள்இல்லங்களையே கட்டிடச் சிற்பக் கலைக் களஞ்சியங்களாக வடித்தும், தமிழகத்தில் தொன்று தொட்டு வந்த கட்டிடக் கலையும் சிற்பக் கலையும் அழிந்து போகாமல் காத்தனர்.

தமிழகத்தை ஆண்ட ஒவ்வொரு அரச மரபினர் காலத்திலும் ஒவ்வொரு சிற்ப மரபு இருந்தது. பல்லவர் சிற்ப மரபு, பாண்டியர் சிற்ப மரபு, சோழர், விசயநகர, சேதுபதி காலச் சிற்ப மரபு என்று காணப்படுவதைப் போல நகரத்தார்களுக்கென்றும் ஒரு சிற்ப மரபு உண்டு. தமிழக வரலாற்றில் மன்னர்களுக்குப் பிறகு நகரத்தார் இனத்திற்குத் தான் பார்த்தவுடனேயே செட்டிநாட்டுச் சிற்பப் பாணி என்று இனங்கண்டு கொள்ளும் வண்ணம், ஒரு தனியான சிற்ப மரபு காணப்படுகிறது. இவர்கள் காலச் சிற்பங்களை, கட்டிடச் சிற்பங்கள், செப்புப் படிமங்கள், சுடுமண் சிற்பங்கள், மரச் சிற்பங்கள், வாகனங்கள் என்று பலவாறாகப் பகுத்துக் காணலாம்.

தமிழகத்தில் மட்டுமல்லாமல் காசி முதலாகப் பல வடநாட்டுக் கோவில்களும் இவர்களால் திருப்பணி செய்யப்பட்டன. பர்மா, மலேயா, சிலோன் போன்ற அயல் நாடுகளிலும் இன்று இங்கிலாந்து, அமெரிக்கா போன்ற நாடுகளிலும் சிவனுக்கும், குகனுக்கும், திருமாலுக்கும் கோவில்கள் எடுத்து, திராவிடச் சிற்ப மரபை உலகெங்கும் பரவச் செய்துள்ளனர்.

## கட்டிடச் சிற்பங்கள் :

கருவறை, அர்த்த மண்டபம், மகா மண்டபம், முன் மண்டபம், திருச்சுற்று, மண்டபத்தூண்களில் காணப்படும் சிற்பங்கள், கருவறையில் புறச்சுவர்களிலுள்ள அதிட்டானம், தேவகோட்டம், கும்பபஞ்சரம், சுவரிலிள்ள அரைத் தூண்கள், பிரஸ்தரப் பகுதியிலுள்ள கொடுங்கைகள், கூடுகள் ஆகியவற்றின் அமைப்புக்கள், அவற்றில் வடிக்கப்பட்டுள்ள படைப்புச் சிற்பங்கள் ஆகியவை நகரத்தார்கள் கட்டிய கோவில்கள்

அனைத்திலும் ஒரே மாதிரியாகப் காணப்படு கின்றன. பழைய கட்டிட முறையில் பெரும் பாலும் கருவறைத் திருச்சுற்று மூடப்படாமல் திறந்த வெளியாக இருக்கும். நகரத்தார் பாணியில் திருச்சுற்று மூடப்பட்டிருக்கும். அதே சமயம் காற்றும் வெளிச்சமும் வரத்தக்க வகையில் திருச்சுற்றின் கூரைப் பகுதி கற் களையே இடைவெளி விட்டு, சாளர அமைப் புடன் கட்டியிருப்பது குறிப்பிடத்தக்கதொன் றாகும். இத்தகைய கட்டுமான முறையை இலுப்பைக்குடி, மாத்தூர் ஆகிய கோவில் களைப் பற்றி எழுதிய மா. சந்திரமூர்த்தி, 'நகரத்தார் கலை' என்றே குறிப்பிடுகிறார். இராமேசுவரத்திலுள்ள உலகப் புகழ் பெற்ற பிரகாரத்தைப் போல, திருவாடானைக் கோவிலில் சொக்கட்டான் 'மண்டபத்தை அமைதத்வர்கள் தேவகோட்டை நகரத்தார்கள்.

## தூண் சிற்பங்கள்:

மண்டபங்களிலும் திருச்சுற்றுகளிலும் உள்ள பெரியபெரிய தூண்களை சிற்பங்களும், யாளிகளும் சுமந்து கொண்டிருப்பது போலக் காணப்படும் அத்தூண்களைச் சார்ந்து பல சிறிய வேலைப்பாடு மிக்க தூண்கள் அமைக்கப்பட்டிருக்கும். சிமெண்ட் பூச்சுக்கள் இல்லாத அந்தக் காலத்தில், சிறிதும் இடைவெளி தெரியாவண்ணம் கற்களை ஒன்றோடு ஒன்று பொருத்தியிருக்கும் பாங்கு வியப்பூட்டும் காட்சியாகும். தூண் களில் சைவ வைணவ சமயத் தொடர்புடைய சிற்பங்களும் பூ வேலைப்பாடுகளும் செதுக்கப் பட்டிருக்கும். நேமங்கோயில், பிள்ளையார் பட்டி, மாத்தூர், இலுப்பைக்குடி, கோவிலூர், வைரவன் கோவில் ஆகியவற்றிலுள்ள தூண் சிற்பங்கள் குறிப்பிடத்தக்கவை. மதுரை மீனாட்சியம்மன் கோவிலில் சுவாமி சந்நிதி இரண்டாம் பிரகாரத்திலுள்ள நாயக்கர் கால கம்பத்தடி மண்டபத்தை நகரத்தார்கள் பிரித்து, சிற்ப வேலைப்பாடு மிக்க எட்டுத் தூண்கள் தாங்கி நிற்கும் கருங்கல் மண்டப மாக அமைத்தனர். இத்தூண்களில் ஒன்றில் உள்ள மீனாட்சியம்மன் திருமணக் கோலச் சிற்பம் உலகப் புகழ் பெற்றது.

விசயநகர நாயக்க மன்னர்கள் காலத்தில் தூண்களின் மேலுள்ள போதிகை அமைப்பு தாமரை மொட்டுப் போலக் காணப்படும். இவ்வமைப்பு நகரத்தார் காலத்தில் நான்கு வளர்ச்சியடைந்து வாழைப்பூ வடிவுள்ள புஷ்ப போதிகையாகக் காணப்படுகின்றது.

கருவறையின் வெளிச் சுவர்களில் உள்ள கூடுகளின் அமைப்பும், கோவிலின் காலத் தைக் கணிக்க உதவுபவை. இக்கூடுகள் தற்காலத்தில் மிக எளிமையாக இருக்க, நகரத்தார் பாணிக் கூடுகள் யாளிமுகக் கூடு களாக அமைந்து கூட்டிற்குள் மிகமிகச் சிறிய அளவில் நுணுக்கமான வேலைப்பாடமைந்த சிற்பங்கள் காணப்படுகின்றன.

பாண்டி நாட்டுச் சிற்பிகள் தாங்கள் ஒரு வேலையைத் தொடங்கு முன்பு ஆவுடையார் கோயில் கொடுங்கை நீங்கலாக, மற்று எந்தச் சிற்ப வேலையும் தங்களால் செய்ய இயலும் என்பதாக எழுதிக் கொடுப்பார்களாம். ஆனால் நகரத்தார்களால் வளர்க்கப்பட்ட சிற் பிகள் வடித்த கோயிற் கொடுங்கைகள் அனைத்துமே ஆவுடையார் கோயிற் கொடுங் கைகளுக்கு இணையாக சிற்ப நுணுக்கத் துடன் காணப்படுகின்றன. மாத்தூர் கோயி லின் கொடுங்கைகளைக் கண்டு வியந்த மா. சுந்திரமூர்த்தி அவர்கள், ''கொடுங்கைகளின் இடையிடையே உட்புறங்களில், மாத்தை

ஊடுருவிச் செல்லும் நீண்டகம்பிகளை ஒத்தும் முறுக்குக் கம்பிகளை ஒத்தும் விளங்குகின்ற கல் வேலைப்பாடுகள் பார்ப்போரை வியப்பில் ஆழ்த்துவன'' என்கிறார்.

கோவில் மண்டபத்தின் விதானப் பகுதியில் 12 ராசிகளைப் பொறிக்கும் வழக்கம் பழைய சிற்ப முறையானாலும் நேமங்கோவில் விதானத்தில் காணப்படும், இராசிச் சக்கரத்தின் அமைப்பு விநோதமானது. நாம் ஏதாவதொரு திசையின் கோணத்தில் நின்று பார்த்தால் ஒரு இராசியைத் தூணின் போதிகைமறைந்திருக்கும் படியாக அமைத்திருக்கிறார்கள், நேமங்கோயிற் சிற்பிகள்.

இவர்கள் காலத்தில் கருவறை தேவகோட்டத்திலுள்ள தெய்வங்களும் வழிபாட்டிற்குரியவாக அமைக்கப்பட்டன. தேவகோட்டம் அமைந்த அதிட்டானப் பகுதியில் உள்ள குமுதப்படை விருத்த குமுதாக, பூ, மணி ஆகிய வேலைப்பாடுகளுடன் அமைக்கப்பட்டது. தெற்கில் தட்சிணாமூர்த்தி உள்ள தேவகோட்டத்துக்குத் தனிக்கவனம் செலுத்தப்பட்டது. தட்சிணாமூர்த்திக்குத் தனியாகச் சிறு மண்டபம் எடுத்தனர். இம்மண்டபம் வேலைப்பாட்டுடன் கூடியது. இத்தகைய சிறிய வேலைப்பாடு நிறைந்த மண்டபங்களை மாத்தூர், இலுப்பைக்குடி, தேவகோட்டை நகரச்சிவன் கோவில் ஆகியவற்றில் காணலாம். காரைக்குடி நகரச் சிவன் கோவிலில் தெற்கில் கருவறைத் தேவகோட்டம் ஒன்றில் சரபேசமூர்த்தியின் செப்புத் திருமேனி வழிபாட்டில் இருப்பது குறிப்பிடத்தக்கது. இது போன்ற சரபேச மூர்த்தியின் செப்புத் திருமேனி ஒன்று (சோழர் காலத்தது) திருப்புவனம் கோவிலில் உள்ளது.

ஒவ்வொருவருடைய படைப்புக்களிலும் அவ்வக்காலத்துச் சூழல் வெளிப்படும் என்பதற்கேற்ப நகரத்தார்கள் தங்கள்காலச் சூழ்நிலையைப் பிரதிபலிக்கும் மூலமாக, திருச்சுற்று விதானங்களிலும், மண்டப விதானங்களிலும் புடைப்புச் சிற்பங்களாகவும், கருவறை விமானம், கோபுரம் ஆகியவற்றில் சுதைச் சிற்பங்களாகவும் புதுமை செய்தனர். இந்திய விடுதலைப் போராட்டத்தைப் பிரதிபலிக்கும் வகையில் காந்தியடிகள் இராட்டை கொண்டு நூல் நூற்பது, பண்டிதநேரு, நேதாஜி, சுதந்திர தேவி போன்றவைகளை அமைத்துள்ளனர்.

## கோபுரங்கள் :

மதுரை மீனாட்சியம்மன்கோவில் வடக்குக் கோபுரம் அமராவதிபுதூர் வயிநாகரம் நாகப்பையா அவர்களால் துணிவுடன் கட்டி முடிக்கப்பட்டது நாற்புறமும் கடலால் சூழ்ந்துள்ள இராமேசுவரத் தீவில் கடல் வழியாகக் கற்களைக் கொண்டு சென்று இராமேசுவரத்துக் கிழக்குக் கோபுரம் இலங்கையில் தெரியும்படியாக உயர்ந்த கோபுரத்தைக் கட்டியவர்கள் தேவகோட்டை ஜமீன்தார் குடும்பத்தார்கள். அண்மையில் தேவகோட்டை நகரச்சிவன் கோவிலில் புதிதாகக் கட்டப்பட்ட இராஜ கோபுரங்கள் வரை நகரத்தார்கள் கட்டிய கோபுரங்கள் எத்துணையோ! இக்கோபுரங்களில் சமயத் தொடர்புடைய சுதைச்சிற்ப வேலைப்பாடுகள் காணப்படுகின்றன.

## பிரதிமங்களும், செப்புத் திருமேனிகளும் :

அடுத்தாக நகரத்தார்கள் கட்டிய கோவில்களின் மண்டபத் தூண்களில் திருப்பணிசெய்தவர்களின் உருவமோ அல்லது அவர்களது பெற்றோர் உருவங்களோ

கற்சிற்பங்களாகச் செதுக்கப்பட்டிருப்பதைப் பல கோவில்களில் காணலாம் இரு கைகளும் கூப்பிய நிலையில், நெற்றியிலும், உடலிலும் திருநீறு அணிந்த திருக்கோலத்துடன், கைகளில் உருத்திராக்க மாலை விளங்க, முகத்தில் மீசை இல்லாமல், மேல் ஆடை இல்லாமல், தலைப்பாகையுடன், தார்ப்பாச்சு வேட்டியுடனும் கூடிய அமைதியான தோற்றம் நகரத்தார்களைப் படம் பிடித்துக் காட்டுவதாக உள்ளது.

வன்னியஞ்சூரைக்குடிச் சிவன் கோவிலைத் திருப்பணி செய்த காரைக்குடி முரு. லெ. கிருஷ்ணன் செட்டியார், தந்தையின் சிலையை மண்டபத் தூணில் வடித்து, தாயின் சிலையை ஐம்பொன்னால் செய்து வைத்துள்ளார். அவ்வம்மையார், நகரத்தாருக்கே உரிய சிறப்பு அணிகலனை கழுத்து உரு (அல்லது கழுத்துத்திரு) அணிந்த கோலத்துடன் காட்சியளிப்பது வேறு எங்கும் காணாத காட்சியாகும். கோவில்களுக்குக் கணக்கற்றவாகளச் சிற்பங்களை, மரத்திலும், வெள்ளியிலும் செய்து கொடுத்துள்ளனர்.

பைரவரை யோக பைரவராகவும் அவர்க்குரிய நாய் வாகனத்துடனும் வடிப்பர். இரட்டை நாய்கள் பைரவருக்கு இரு புறமும் நிற்கும் சிற்பங்கள், பாண்டி நாட்டில் பரவலாகக் காணப்படுகின்றன. இந்தவழக்கத்தை நகரத்தார்களும் தொடர்ந்து கடைபிடித்து வந்துள்ளனர். சுவர்ண ஆகர்ஷண பைரவருக்கு என்று தனிக் கோயிலைத் தமிழகத்தில் முதன்முதலாகத் தேவகோட்டையில் எடுத்துள்ளனர். சுவர்ண ஆகர்ஷண பைரவர் என்பது சக்தி அருகில் வீற்றிருக்கும் வண்ணம் உள்ள பைரவராகும். இம்மூர்த்தம் கருவறையில் செப்புத் திருமேனியாகக் காணப்படுகிறது.

## செட்டிநாட்டு வீடுகள் :-

இவ்வாறாக தங்களுக்கென்று ஒரு சிற்ப மரபை வகுத்துக் கொண்ட நகரத்தார்களின் வீடுகளும், சிற்ப நுணுக்கத்தோடு கட்டப் பட்டுள்ளன. வீடுகளை மிகப் பெரியவைகளாக குடும்பத்தார் அனைவரும் கூடி வாழ்வதற்கேற்றதாக, திருமணம் போன்ற விஷேடங்களை வீட்டிலேயே நடத்துவதற்கேற்ப முகப்பு, வளவு, பட்டகசாலை, வளவில் இரட்டை வீடுகள், கல்யாணக் கொட்டகை, பந்திக்கட்டு, மேல்வீடு, ஹால் வீடு, இரண்டாங்கட்டு, இரண்டாங்கட்டு அறைகள் மச்சு, அடுப்படி, குச்சுவீடு போன்றபலஅங்கங்களைக் கொண்டதாக இரண்டுவீதிகளையும் இணைக்கும் படியாகக் கட்டினர். பர்மா தேக்கு மரத்தால் வீட்டின் மேல் கோப்பையும், உத்தரங்களையும், நிலைகளையும், கதவுகளையும் அமைத்தனர். வீட்டின் முகப்பு நிலைகளும் கதவுகளும் கோயில் கதவுகடைப் போல பெரியவைகளாக சிற்ப வேலைப்பாட்டுடன் காணப்படுகின்றன. முகப்பு நிலையின் நடுவில் திருமகளின் சிற்பம் காணப்படும். இருபுறமும் யானைகள் மற்றும் யாளிகள், குதிரைகள், கொடிக்கருக்குகள், பூ வேலைப்பாடுகள் கொண்டவையாக இருக்கும். முகப்பு நிலைக் கதவு மட்டுமே, அதன்சிற்ப வேலைப்பாட்டுக்காக இன்று பல இலட்சம் பெறுமானமுள்ளதாகக் காணப்படுகிறது. முகப்பிலும் வளவிலும் காணப்படும் தூண்கள், மரம் கருங்கல்லால் ஆகியவை. தூண்களின் கீழ்ப்பகுதி சதுரமாகவும், நாகபந்த அமைப்புடனும் விளங்குகின்றன. தூணின் நடுப்பகுதி எட்டுப் பட்டையாகவும் அதற்கு மேல் குடம் போன்ற அமைப்பும் அதற்கும் மேற்பகுதியில் போதிகையும் காணப்படும். போதிகையின் முனை நகரத்தார் சிற்ப முறைப்படி நன்கு வளர்ந்த நிலையில் வாழைப்பூ முனை போலக் காணப்

படும். நகரவிடுதிகள், நகரச் சத்திரங்களிலும் இக்கட்டிடக் கலை அமைப்பைக் காணலாம்.

நகரத்தார் இல்லங்களில் காணப்படும் சுதைச் சிற்ப வேலைப்பாடுகளும் குறிப்பிடத் தக்கவை. வீட்டின் நுழைவாயில் பெரும் பாலும் தோரண வளைவாகக் காணப்படும். முகப்பின் மேற்பகுதியில் பலசுதைச்சிற்பங்கள் காணப்படும். கஜலட்சுமி, யோக நரசிம்மர் போன்ற தெய்வ வடிவங்களும், இரு புறமும் சிங்கங்கள், குதிரைகள், குதிரை வீரர்கள், ஐரோப்பிய உடையணிந்த ஆண், பெண் உருவங்களும், இன்னும் பல விதமான சுதைச் சிற்பங்களும் வண்ணம் பூசப்பட்டுக் காணப்படும்.

வீட்டுச் சுவர்கள் சங்கு வெள்ளைச் சுவர் களாக, வழவழப்புடன் காணப்படும். இச் சுவர்கள் பனைவெல்லம், கடுக்காய், முட்டை ஆகியவற்றைச் சுண்ணும்புடன் சேர்த் தரைத்துப் பூசப்பட்டவையாகும்.

இன்றைக்கும், தமிழகத்துச் சிற்பிகள் அருமையான பழைய திராவிடச்சிற்பக் கலை ஒன்றை மறக்காமல் காத்து வருகின்றார்கள் என்றால் அதற்குக் காரணம், நகரத்தார்கள் தான். நகரத்தார்களின் சிற்பக் கலைச் சிறப்பைக் கூற வந்த கவிஞர் கண்ணதாசன் அவர்கள்,

''காசி நகரத்துக் கடவுளரைப் பேச
வைத்தால்
காவிரிப்பூம் பட்டினத்தார் கலையுணர்ச்சி
தோன்றவரும்
சுற்றியுள்ள மண்டபமும் தூக்கி வரும்
வாகனமும்
முற்றும் அழியாத மொட்டைக்
கோபுரத்தழகும்
அண்ணுமலையில் அமர்ந்திருக்கும்
பேரழகும்
ஆக்கிக் கொடுத்தவர்கள் அமர்ந்திருந்து
காத்தவர்கள்

நாட்டுக்கோட்டை வளர்த்த நகரத்தார்
நாமல்லவோ'

என்று பாடுவது உண்மை, வெறும் புகழ்ச்சி யில்லை.

## பேறு பதினறு

புகழ் கல்வி வலி வெற்றி
நன்மக்கள் பொன் நெல், நல்வாழ்வு
நுகர்ச்சி அறிவு அழகு பெருமை
இளமை துணிவு நோயின்மை வாழ்நாள் இவை
பதிருறும்.

## சோதி லிங்கம் - 12 - உள்ள நகர்கள்

1. சோம நாதம் 2. திருப்பருப்பதம் (ஸ்ரீ சைலம்) 3. உஜ்ஜைனிமாகாளம் 4. ஓங்காரமமலேசுவரர் 5. வைத்திய நாதம் 6. பீமசங்கரம் 7. இராமேசுவரம் 8 நாகேசம் 9. வாரணுசி (காசி) 10. திரியம்பகம் 11. கேதாரம் 12 குஸ்மேசம்.

—அழ. சாரதாள்

# நகரத்தார் திருப்பணிகள்

## நகரத்தார் கோவில் திருப்பணிகளுக்காகச் செலவிட்டுள்ள தொகைகள் வருமாறு :-

(பத்தரைக் கோடிக்குமேல்—100ஆண்டுக்கு முன்பிருந்த மதிப்பின்படி)

| | | |
|---|---|---|
| 9 நகரக்கோவில்கள் | ரூ | 1,05,42,500 |
| செட்டிநாட்டு ஊர் கோவில்கள் | ரூ | 3,83,14,700 |
| அருகில் அமைந்த 78 வேற்றூரின் 33 கோவில்கள் | ரூ | 64,92,500 |
| காசியிலும் சோழநாட்டிலும் உள்ள கோவில்கள் 96 | ரூ | 2,96,43,500 |
| பாண்டி நாட்டிலுள்ள 24கோவில்கள் | ரூ | 95,44,500 |
| கொங்கு நாட்டில் உள்ள 10 கோவில்கள் | ரூ | 12,41,000 |
| நடுநாட்டுத் தலங்களில் உள்ள 11 கோவில்கள் | ரூ | 67,35,000 |
| தொண்டைநாட்டுத் தலங்களில் உள்ள 20 கோவில்கள் | ரூ | 39,27,000 |
| | ஆக | 10,64,40,700 |

—நன்றி நாநயா-1988

# முருகனும் நகரத்தாரும்

**டாக்டர். வெ. தெ. மாணிக்கம்** எம்.ஏ., பி.எச்.டி.,
பேராசிரியர், தமிழ்த்துறைத் தலைவர்,
*பச்சையப்பன் கல்லூரி, சென்னை - 600 030.*

'என்று நீ அன்று நான்' என்னுமளவுக்கு முருகனுக்குத் தமிழோடு தொடர்பு உண்டு. செவ்வேளின் பெருமை பேசாத செந்தமிழ் நூலில்லை. 'சேயோன்மேய மைவரைஉலகம்' என்று தொல்காப்பியம் குமரனைக் குறிப்பிடு கிறது. திருமுருகாற்றுப்படையோ வேலனிடம் அடியாரை ஆற்றுப்படுத்துகிறது. முருகனின் பிறப்பையும் வென்றிச் சிறப்பையும் பரிபாடல் பேசுகிறது. சங்க இலக்கியங்களும் காப்பி யங்களும் முருகனைப் பரவும். அருணகிரியார்' கச்சியப்பர், இராமலிங்க வள்ளலார் பாடல் களிலும் முருகவேள் உலவாதபேரின்பவாழ்வு தரும் உயர்வையும் கண்டு மகிழ்கிறோம்.

'முருகு' எனும் சொல்லுக்கு இளமை, இனிமை, அழகு, உயர்வு, தெய்வத்தன்மை எனப் பல பொருளுண்டு. முருகன் அவ்வுயர் பண்புகள் பலவற்றின் உறைவிடமாகத் திகழ் பவன். முன்னைப் பழம் பொருட்கும் முன் னைப் பழம்பொருளாய்ப், பின்னைப் புதுமைக் கும் புதுமையாகத் திகழ்பவன் முத்தையன். உலகில் எங்கெல்லாம் தமிழர் உளரோ, அங் கெல்லாம் 'தமிழ்' உண்டு; முருகனும் உளன். தமிழர் கடல் கடந்து வாழும் நாடு களிலும் குமரனுக்குக் கோவிலுண்டு.

## முருகனும் நகரத்தாரும்

சிவனுக்கும் முருகனுக்கும் வேறுபாடின் மையின், நகரத்தார், சைவத் திருப்பணியில் முருக வழிபாட்டில் நாட்டங் கொண்டனர். முருகப்பெருமானுக்குச் 'செட்டிமகன்' என்ற பெயரும் உண்டு. 'செட்டிப்பிள்ளை கெட்டிப் பிள்ளை' என்பது வழக்கு. அழகாலும், அறி வாலும் திறத்தாலும் வல்ல முருகனை அவ் வாறழைத்தது இயல்பே. இறையனார் அகப் பொருளுரை அரங்கேற்றப் பெற்ற காலத்தில் மதுரை உப்பூரி குடிகிழார் மகன் உருத்திர சன்மானாகத் தோன்றி அவ்வுரையின் சிறப் பினை உணர்த்தியதைக் களவியலுரை காட்டு கிறது. முருகனே செட்டி மகன் உருவில் ஊமையாக வந்து புலவர் குழாத்தமர்ந்து களவியலுரை கேட்டுக் கண்ணீர் வழிய அதன் திறமுணர்த்தினார் என்பது செவிவழிச்செய்தி.

'செட்டி' எனும் சொல் தட்டுப்பாடற்ற வைசிக வாழ்க்கை வாழும் பெருமகனைக் குறிக்கும் எனப் பெருங்கதை சுட்டுகிறது. அவ்வாழ்வைத்தரும் முருகனையும் அச்சொல் குறிக்கலாயிற்று.

''கட்டியைக் கரும்பின் தெளிதன்னைக்
காதலால் கடர்சூர் தடிந்திட்ட
செட்டியப்பனைப் பட்டனைச் செல்வ
ஆரூரானை மறக்கலு மாமே.''

செட்டியாகிய முருகனுக்குத் தந்தை செல்வ ஆரூரர் என்று சுந்தரர் தேவாரத்திற் குறிக்கப் பெறுகிறார். ''செட்டி மகனே இந்தத் தெந்தினம் செய்யலாமா?'' எனும் தொடரும் முருகனுக்கும் நகரத்தார்க்கும் உள்ள தொடர் பினைச் சுட்டுகிறது.

ஒரு சிறு வேலை நகரத்தார் எடுத்துச் சென்று அயல்நாட்டில் தாம் வாழுமிடத்தில் நட்டு, வணங்கி வழிபட்டனர். அதனாலே யே தென்கிழக்கு ஆசியா முழுவதிலும் சென்று வாணிகம் செய்த நகரத்தார் பெரு மக்கள் பண்டு முருகனுக்கே கோவில் கட்டி விழா எடுத்து மகிழ்ந்தனர். சிவன்கோவில் கட்டி வழிபடுவதெனில், ஆகம முறைப்படி பூசை நடத்துதல் வேண்டும். ஆகமப் பயிற்சி யுடைய குருக்கள் அயல் நாடுகளில் கிடைப் பது அருமையிலும் அருமை. எனவே முதலில் முருகன் படத்தை வைத்து, பின் வேலை ஊன்றி வழிபட்ட எளிய மரபை அங்குக் காண்கிறோம். வணிகம் குறித்துத் தங்களுக் குள் கூடிப் பேசி எம்முடிவை எடுப்பதாயினும் நகரத்தார் சமூகத்தைச் சேர்ந்த அனைவரும் முருகன் கோவில் முற்றத்தேதான் கூடுவர். தொழில் சம்பந்தமான பொது முடிவுகளைச் செய்வதற்கு அத்தகைய கோவிற் கூட்டங் களில் தமக்குள் ஒரு தலைவரைத் தேர்ந் தெடுப்பதில்லை. செட்டி முருகனே தலைவன் எனும் நம்பிக்கை மிக்கிருந்ததே அதற்குக் காரணம்.

இன்றைக்கும் விரதமிருந்து பழநி வழி நடையென்றும், வைத்தீசுவரன் கோவில் வழி நடையென்றும், திருத்தணிப் பாதயாத்திரை என்றும் நகரத்தார் பெருமக்கள் முறையாக மேற்கொண்டு வரும் வழிபாட்டு நெறிகள் முருகனுக்கும் நகரத்தார்க்குமுள்ள தொடர் பினைச் சுட்டுவன. வேலூன்றிப் பூசை போட்டுச் சோறிடும் நகரத்தார் தொன்மரபு இன்றும் தொடர்ந்து வரக் காண்கிறோம். நிறை செல்வ வாழ்வு வாழ விரும்பிய நகரத் தார் கந்தபுராணம் கூறுகிறபடி, கந்தனுக் குரிய சஷ்டியும் சதய நாண்மீனும் இணைந்து வரும் நாளில் பிள்ளையார் நோன்பு கொண்டாடி வருகின்றனர்.

அறுபடை வீடுகளுள் திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், பழனி, சுவாமிமலை, திருத் தணிகை ஆகிய ஐந்து தலங்களிலும், மற்றும் குன்றக்குடி, விராலிமலை, துவார், காஞ்சி புரம். திருமுருகன் பூண்டி, கல்கத்தா முதலாய பல ஊர்களிலும் முருகன் கோவில்களை ஏற்படுத்தி நகரத்தார் செய்துள்ள திருப்பணி களும், அமைத்துள்ள அறக்கட்டளைகளும் விரிப்பிற்பெருகும்.

"சுக்குக்கு மிஞ்சிய மருந்தில்லை சுப்பிர மணியருக்கு மிஞ்சிய தெய்வமில்லை" என உறுதியாக எண்ணி வாழ்பவர் நாட்டுக் கோட்டை நகரத்தாராவார். அதனாலேய திருமுருகனைக் குறித்து விரதமிருப்பதும், விழா எடுப்பதும், காவடி எடுப்பதும், பூசை போடுவதும், பாடிப் பரவுவதும் ஆகிய பல்வேறு செயல்களை விடாது மேற்கொண்டு வருகின்றனர்.

"தெய்வம் பலவென்று சிந்தித்துத் தீராத
பொய்வழக்குப் பலபேசிப் புலர்கின்ற.
புல்லறிவீர்!
மெய்வசனம் ஒன்று விளம்புகின்றேன்
யாதென்றால்
சைவ முதலாய சண்மதமும் சண்முகமே!"

என உறுதி உரைப்பர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள். முருகனை வழி பட்டால் பிற தெய்வங்கள் யாவற்றையும் வழிபட்டதாகும். ஆனைமுகன், குமரன், சிவன், சக்தி, திருமால், சூரியன் எனவரும் அறுவகைச் சமயத்துக்கும் ஆறுமுகன் ஒரு வனே பொருத்தமானவன் எனும் கருத்தால்

"வேலுண்டு வினையில்லை; மயிலுண்டு
பயமில்லை;
குகனுண்டு குறைவில்லை; கந்தனுண்டு
கவலையில்லை."

எனக் களிப்போடு வாழ்பவர் நகரத்தார் பெருமக்கள் ஆவர்.

''நீருண்டு பொழிகின்ற காருண்டு'' எனத் தொடங்கும் வள்ளலார் பாடல் முருகனடியார் அடையும் பேறுகளை கூறுகிறது. அம் முறையில் கல்வி மேம்பட, செல்வம் செழிக்க, குடி தழைக்க, வீரம் விளைய, வெற்றி கிட்ட, ஞானம் தலைப்பட, முத்தியடைய முத்தையனைப் பன்னெடுங் காலமாகவே ஆன்ற தமிழ்ச் சான்றோர் ஆராக் காதலொடு வழிபட்டு வந்துள்ளனர். அது போன்றே இனியும் நகரத்தார் பெரு மக்கள் செவ்வேளை வந்தனை செய்து, மனத்தில் இருத்தி, வாயுற வாழ்த்தி, மாறிலா மகிழ்ச்சியில் திளைப்பாராக!

## வழிபாட்டு முறை

கோவிலுக்கருகில் உள்ள குளத்தில் கைகால் கழுவி திருநீறு அணிய வேண்டும்.

இராசகோபுரத்தில் முன் நின்று மூலமந்ததிரம் (ஓம்நமசிவாயா) உச்சரித்துக் கைகளைத் தலைமேல் குவித்துக் கும்பிடவேண்டும். கொடிமரத்தில் ஆண்களாயின் அட்டாங்க நமஸ்காரம் (தலை, கைகள் தோள், செவி மேலாய்) பெண்களாயின் பஞ்சாங்க நமஸ்காரம் (தலை, கைகள், முழந்தாள்கள்) செய்யவேண்டும். தொடர்ந்து மூலமந்திரத்தை உச்சரித்து வலம் வர வேண்டும்.

பின்பு பலிபீடம் சென்று அகங்காரம், ஆசை, காம குரோதங்களைப் பலி கொடுத்ததாக எண்ணி வணங்க வேண்டும்.

விநாயகர் சந்நிதியில் வலக்கையால் இடப்புறமும், இடக்கையால் வலப்புறமும் தலையில் 3முறை குட்டிக்கொண்டு வலக்கையில் இடக் காதையும் இடக்கையில் வலக்காதையும் பிடித்துத்தம் குற்றங்களுக் குத்தாமே தண்டனை செலுத்தியதாய்ச் தோப்புக்கரணம் போட வேண்டும். பாவங்கள் சிதறுவதற்காகச் சிதறுதேங்காய் உடைப் பதுண்டு.

அடுத்து, அனுமதி பெறுவதாக எண்ணி, துவாரபாலகர்களை வணங்க வேண்டும்

தேங்காய், பழம் கொடுத்து, கற்பூரம்பார்த்து மூலமூர்த்தியை வணங்கி திருநீறு பிரசாதம் பெறவேண்டும்.

இவ்வாறு அம்பாளையும் வணங்கி பின் உட்பிரகாரங்களில் உள்ள பரிவார மூர்த்திகளையும் வணங்கி வலம் வரவேண்டும்.

சண்டிகேஸ்வரர் தியானத்தில் இருப்பதால் 3முறை ஒலி எழுப்பி அழைத்து வணங்கி விடைபெற வேண்டும்.

மீண்டும் கொடிமரம் வந்து அமர்ந்து வழிபட்ட மூர்த்திகளை எண்ணி மூலமந்திரத்தை 108 முறை அல்லது 21 முறை உச்சரிக்க வேண்டும்.

# நகரத்தாரின் வைணவப்பணி

**டாக்டர் வெ. சு. அழகப்பன்,** எம்.ஓ.எல், எம்லிட், பி.எச்டி,
அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி.

முன்னுரை

நகரத்தாருக்குச் சமயமும், தமிழும் இரு கண்கள். இவை இரண்டுமே வளர—வாழ நகரத்தார்கள் பெரும் அளவு தொண்டாற்றியுள்ளனர். நகரத்தாரின் வரலாறு, எப்பொழுது தொடங்குகிறது? சிலப்பதிகாரத்தில் ''நகரத்தார்'' என்றசொல் வருகிறது. கல்வெட்டுக்களிலும் 'நகரத்தார்' 'நானுதேசிகள்' என்ற சொல் வரும். இவை இன்றைய செட்டியார்களைக் குறிப்பதாய்க் கூறுதல் சரியா? என ஆராய்தல் வேண்டும். இவை 'வணிகர்' என்ற பொருளில் சுட்டப்படும். அவ்வளவே!

சோழநாட்டில், கி.பி. 14இல் முகமதியர் படையெடுத்துப் பலவாறு கொள்ளையிட்டனர் இக்காலத்தையொட்டி வணிகரான மக்கள் நாகபட்டினம், காரைக்கால், காவிரிப்பூம்பட்டினம் ஆகிய பகுதிகளில் இருந்து பாண்டி நாட்டுக்குப் பாதுகாப்புக்கருதி வந்தனர். வந்தவர்கள் முதலில் இளையாற்றங்குடியில் தங்கினர். நகரத்தார் ஒன்பது பிரிவினராக இருந்தது குறித்துப் பாடுவார் முத்தப்பையா தமது ''ஷண்முகவிலாசத்தில்'' குறிக்கிருர். அவரதுகாலம் கிபி. 17 இன் பிற்பகுதி. பழநி வழிநடைப்பயணம் குறித்த செப்பேட்டில் வைரவன் கோவில், மற்றைய கோயில் பிரிவுகள் குறிக்கப்படுகின்றன. அதுகி.பி. 16 ஆகவே 400 ஆண்டுகட்கு முன்பே இப்பிரிவுகள் குறித்த வரலாற்றுச் சான்றுகள் கிடைக்கின்றன என்பதாம். இதற்கு முன்னர் வரலாற்றுச்சான்றுகள் கிடைக்கவில்லை. ஆகவே 14 ஆம் நூற்ருண்டையொட்டி சோழ நாட்டிலிருந்து வந்தவர்கள், 15ஆம் நூற்ருண்டில் பாண்டி நாட்டை ஆண்ட நாயக்க மன்னர்களிடம் நம்பிக்கையை ஏற்படுத்தி ஒன்பது ஊர் கோவில் நிர்வாகத்தைப் பெற்றுக் கண்காணித்தனர்.

உள்நாட்டில் பல பண்டங்களை விற்று வணிகம் செய்த நகரத்தார்கள் அயல் நாட்டுக்குச்சுமார் 250 ஆண்டுகட்கு முன்னர் சென்றனர். முதலில் இலங்கைக்கும் அடுத்து பர்மாவிற்கும் அடுத்து மலேயாவிற்கும்சென்று வட்டித் தொழில் புரிந்தனர். இந்தக்காலம் தான் நகரத்தாருக்குப் பொற்காலம். வட்டித் தொழிலில் பொன்னும் பொருளும் குவிந்தன. உள் நாட்டில், மண் சுவர் ஓலைச் குடிசை என இருந்த தம் வீடுகளை மாற்றி இன்றுள்ள பெரிய வீடுகளாகச் சுமார் 150 ஆண்டுகட்கு முன்னர் எடுத்துக்கட்டிப் பெருவாழ்வு பெற்றனர். மேலும் செல்வம் பெருகியதால் தர்ம சிந்தனை எழுந்தது. தாம் கண்காணித்து வந்த ஒன்பது கோவில்களையும் சுமார் 150 ஆண்டுகட்கு முன்னர் பிரித்தும் எடுத்தும் கட்டி வளப்படுத்தினர். இன்றுள்ள கட்டுமான அமைப்புக்கள் சுமார் 120 ஆண்டுகட்கு முற்பட்டது. இந்த 9 கோயில்களுமே அடுத்து அடுத்து 10 அல்லது 15 ஆண்டு இடைவெளியில் கட்டப்பட்டன. இவற்றில் நாயக்கர் கால அமைப்பு அடியொட்டி வருதலையும் கவனிக்க வேண்டும். ஆயினும் நகரத்தார் பாணி என ஒன்று உண்டு.

நமது நகரக்கோவில்கள் ஒன்பது மட்டுமல்ல சோழ—பாண்டிய நாட்டுக் கோவில்கள் பல நகரத்தாரின் திருப்பணியைப் பெற்றதும் நூறு ஆண்டுகட்குள்தாம். காரணம் அயல்

நாட்டில் வட்டித்தொழில் பெருகி நம்மவர் கட்குச் செல்வம் இமயமென வளர்ந்தபோது இவை தொடங்கப்பெற்றன.

இவ்வாறு கோயில்பணியில் ஈடுபட்டதும் பணம் மேலும் குவிந்தது. நகரத்தார்கள் தம் கடைகளில் சுவாமிகட்கும்—தர்மங்கட்கும்கூட, கடைகளில் பங்கு வைத்து ஷ தொகையை அந்த அந்த தர்மத்துக்கே செலவிட்டனர். ஆகவேதான் காலத்தின் கோலத்தால் நகரத் தாருக்குப்பல இடையூறுகள் வந்துநொடிக்கும் நிலைவந்தபோதும் இவர்கள் தம் முயற்சியாலும் தெய்வ அருளாலும் மீண்டும் புத்துயிர்பெற்று வாழ்கிறார்கள்.

இன்று நகரத்தார் ஒரு இலட்சம்பேர்தாம் இருக்கிறார்கள். ஆயின் இவர்கள் செய்யும் தர்மம் கோடிகோடியாக உள்ளது. கோவில் கட்காக—அல்லது சுவாமிகள்தொடர்பானசெல விற்காக செலவிட்டது. அன்றைய மதிப்பிற்கு 10-5 கோடிஆகலாம். இவர்கள் அதிகஅளவில் சிவன்கோவில் திருப்பணியில் ஈடுபட்டிருந் தாலும் திருமாலுக்கும் பணி செய்துள்ளனர்.

## வைணவம்

மக்கட்குத் தெய்வப் பெயரிடுதல் சங்க காலம் முதல் உள்ள பழக்கமே! நகரத்தாரில் வைணவத் தெய்வப் பெயர்கள் உண்டு. இராமசாமி, நாராயணன், கோவிந்தன், கிருஷ்ணன், கிருஷ்ணப்பன், ரெங்கநாதன், சீனிவாசன், லெட்சுமணன், வெங்கடாசலம், மாதவன், ராகவன், என்று ஆடவர் பெயரும், அலர்மேலு, இராமாயி, சீதை, லெட்சுமி, ஜானகி, என்று பெண்டிர் பெயரும் நகரத்தாரில் காணப்படுகின்றன. ''பெருமாள் கோவிலார் வீடு'' ''பெருமாள் ஐயா'' என்ற பட்டப் பெயர் பெற்றவர்களும் உண்டு. எனினும் செட்டியார் யாரும் திருமண் இட்டுக்கொள்வதில்லை.

## வைணவத்தில் பெண்கள்

'ஏகாங்கி' என்ற பட்டர்களின் பிரசாரத்தால் சில நகரத்தார் பெண்கள் வைணவர் போல வாழத் தொடங்கிய நிலையும் உண்டு. அதாவதுஅவர்கள்நாமம் இட்டுக்கொள்ளுவர். விசேடக்காரர்கள் வீட்டில் உணவு உண்ணார். தாமே சமையல் செய்துண்பர். தோளில் முத்திரை (சங்கு, சக்கரம் இட்டுக்கொள்ளுவர் மறந்தும் திருமால் அல்லாத பிற தெய்வம் தொழ மாட்டார்கள். வெண்பட்டுக் கட்டுவர். ஆனால் இவர்கள் பெரும்பாலும் விதவையர். குடும்பத்தில் இருக்கும் மகளிர் இதில் சேர்வ தில்லை. அல்லது கணவனைப்பிரிந்து வாழா வெட்டியாக இருக்கும் பெண், முத்திநோக்கி இதில் இருத்தல் உண்டு. இவ்வகை ஆச்சி மார்களை நாட்டரசன் கோட்டை, சொக்கநாத புரம், பட்டமங்கலம், கருங்குளம் ஆகிய ஊர்களில் சுமார் 40 ஆண்டுகட்கு முன் மிகுதியாகப்பார்க்கலாம். இன்று இவர்களின் எண்ணிக்கை குறைந்துவிட்டது.

இவ்வாறு வைணவம் செல்வாக்கு பெறக் காரணம் என்ன? திருமெய்யம், திருக்கோட்டி யூர் ஆகிய தலங்கள் ஆழ்வார்களின் மங்களா சாசனம் பெற்றுச் செட்டி நாட்டுக்கருகில் உள்ளன இராமாநுசர் திருக்கோட்டியூர் வந்து பலருக்கு வைணவத்தை எளிமை யாக்கிப் பரப்பினர். அவருக்கு முன்பே சில வைணவப்பெரியோர்கள் இப்பகுதியில் வாழ்ந் தனர். இந்த வைணப்பட்டர்களின் பொறுப் பில்தான் வைணவக்கோவில்களின் நிர்வாகம் இருந்தன.

அரியக்குடி, தேவகோட்டை, கழநிவாசல் சீனிவாசப் பெருமாள் கோவில் (எழகப் பெரு மாள் விண்ணகரம் என்பது பழைய கல்வெட் டில் கண்ட பெயர்) இவை பட்டர்களின் பொறுப்பில் இருந்தன. காரைக்குடி பெருமாள்

கோவிலும் பட்டர்களின் பொறுப்பில் ஆதியில் இருந்தது. இக்கோவில்களில் பின்னர் நகரத்தார்ஈடு பாடுகாட்டித்திருப்பணிகள்செய்தனர்.

## பெருமாள் கோவில்கள்

நாட்டரசன் கோட்டை, அரியக்குடி, இளையாத்தங்குடி, பாகனேரி, கண்டனூர், புதுவயல், பள்ளத்தூர், முதலப்பட்டி, காரைக்குடி, அலவாக்கோட்டை, கல்லுப்பட்டி, கீழச்சிவல்பட்டி ஆகிய 11 ஊர்களில் பெருமாள்கோவில்கள் உள்ளன. இவற்றில் தேவகோட்டை, புதுவயலில் இரண்டு பெருமாள் கோவில்கள் உண்டு. அதாவதுதென்கலை மரபிற்கு ஒன்று. வடகலை மரபிற்கு ஒன்று. அரியக்குடி வடகலை மரபிற்று. மற்றவை தென்கலை. தென்கலை மரபே அதிகம் உள்ளன.

இப்பெருமாள் கோவில்களைக் கட்டிய முறைகளில் சிலவகைகள் காணப்படுகின்றன.

1. ஏற்கனவே இருந்த சிலைகளைப் பெற்றோ கண்டெடுத்தோ திருப்பணிகள் செய்தனர்.
2. ஒருதனிநபர்பெருமாள்கோவில்கட்டினர்.
3. ஒருவகைப் பங்காளிகள் கூடிக் கட்டினர்.
4. ஒருவகைப்பங்காளிகளுடன் ஊர் நகரத்தார் சேர்ந்து கட்டினர்.
5. ஒருவர் கட்டிய கோவிலில் மற்றவர்கள் தாம் விரும்பும் சிலைகளை வைத்துக் கருவறை உண்டாக்கினர்.
6. மற்றவர்கள், மண்டபங்கள், குளம், பிற எடுத்து ஒருவர் கட்டிய கோவிலில் தம் பணியையும் சேர்த்தனர்.

இம்மரபு சிவன்கோவிலுக்கும் பொருந்தும். ஆனல் ஒன்று உற்று நோக்கத்தக்கது. பெருமாள் கோவில்திருப்பணியை அனேகமாக ஒரு தனி நபரோ ஒருவகைப் பங்காளிகளோ செய்தனர். சிவன்கோவில் பல நகரத்தாரின் பணியாக உள்ளது, ஆஞ்சநேயர் சந்நதி பின்னர் சேர்க்கப்பெற்றுள்ளது ஆழ்வார்கள்சந்நதி கருடாழ்வார் சந்நதி முன்னரே உள்ளன சக்கரத்தாழ்வார் சந்நதி அரிதாக உள்ளது. ஏகாதசி, துவாதசி மடங்கள் பிற்காலங்களில் கிருட்டிணன் கோவிலாக மாறியுள்ளன.

## திருப்பணி செய்தோர்

அரியக்குடியில் சுவாமி வீடு என்பது முதலில் இருந்தது. அதில் வைத்திருந்த பெருமாளைப் பின்னர் கோவிலில் எழுந்தருளச் செய்தனர். இச்சுவாமிவீட்டைக்கட்டியவர்கள் — அழ. ராம. நா. சீனிவாசன் செட்டியார். பெருமாள்சந்நதி—முரு. சேவுகன் செட்டியார் தாயார் சந்நதி—முரு.சாத்தப்ப செட்டியார் & முரு. சேவு. இராமர் சந்நதி—சித.ராம.வெ. ராம. ஆண்டாள் சந்நதி—நாச்சான்! செட்டி வளவு தேசிகன் சந்நதி—தேவகோட்டை மெளவகை. முதல் இராஜகோபுரம் சி. வி. சி. டி. குடும்பத்தார் செய்துள்ளனர். கும்பாபிடேகம் கடைசியாக நடத்தது 1919. இங்கும் நாட்டரசன் கோட்டையிலும் மட்டும் தங்கக் கருடவாகனம்உண்டுமற்றும்வைரமுடிவெள்ளி வாகனம் இருக்கின்றன. இக்கோவிலுக்கு மட்டும் இவ்வகையில் நகரத்தார் செய்துள்ள திருப்பணித் தொகை, நகை, வாகன மதிப்பு 20 அல்லது 25 இலட்சம் வரை என்பர். ‘‘கோவிந்தா போடுதல்’’ இங்கு சிறப்பு வழிபாடாம். இது வடகலை மரபினது. 120 ஆண்டுமுன் நிர்மாணம்.

காரைக்குடி — நாகநாதபுரம் பெருமாள் கோவில் 150 ஆண்டுகட்கு முன்னர் ராய.நா. நாகப்ப செட்டியாரின் தனியொரு திருப்பணியாம். சுவாமி – நர்த்தன கிருஷ்ணன். தாயார் செண்பகவல்லி, ஷியார் பூசைக்காக நிலங்கள் வைத்திருக்கிறார்கள். வெள்ளி வாகனங்கள்பல உண்டு இக்கோவில் பணிக்கும் வாகனுதிகட்குமாக அன்று அவர்கள் சுமார்3இலட்சம்செலவிட்டுள்ளனர். இதுவடகலை மரபிற்று. இவ்வூரில் கிருஷ்ணன் கோவில் உள்ளது. முதலில்

ஏகாதசிமடமாக இருந்தது. இதற்கு வெ.ராம வகையினர் பல சொத்துக்களை வைத்துக் காத்துவருகின்றனர்.

நாட்டரசன் கோட்டைப் பெருமாள் கோவிலில் 1905 இல் குடமுழுக்கு நிகழ்ந்தது குப. கண.கண்ணப்ப செட்டியாரின் முயற்சி. இங்குள்ள தங்கக்கருடவாகனத்தைசுப.ராமன் செட்டியார் செய்து வைத்தார். இவர் மண்டபம் கட்டினர். இவரது வழியினர் வகையினர் கருடன் கோயில் கட்டினர். இங்கு வைரமுடி உண்டு. ஆஞ்சநேயர் சந்நதி! ஆ.விர.வீ கதிரேசன் செட்டியார் கட்டினர். இவ்வாறு பலரின் திருப்பணி இக்கோவிலில் உண்டு. மொத்தம் செலவின் மதிப்பு -8 இலட்சமாகும்என்பர்.

அலவாக்கோட்டையில்1909 இல் செம்புராங்கல் செங்கல்பணியாகஇருந்தது பில்லப்ப செட்டிவகை பெருமக்கள் 1941இல் சம்ரோஷணம் செய்தனர். ஸ்ரீனிவாசப்பெருமாள் கோவிலாக ஆக்கி1981இல் குடமுழுக்குநிகழ்த்தினர். ஒரே வகைப்பங்காளிகளே செய்தனர். அன்று சுமார் 4லெட்சம் செலவு. பில்லப்ப செட்டிவகையில் பிறந்த பெண்களும் கோவில் திருப்பணிக்கு கொடை கொடுத்தனர்.

பாகனேரி பெருமாள்பெயர்–விண்ணவண்ணப் பெருமாள் தாயார் திருமாமகள். முழுதும் நகரத்தார் பொதுவில் நடந்த திருப்பணி 1935ம் வருடம் குடமுழுக்கு. தென்கலை மரபு. பாஞ்சராத்திர ஆகமப்படி பூசை. இராப்பத்து—பகல் பத்து திருவிழா நடப்பது சிறப்பு. சுமார் 3 இலட்சம் செலவில் இது நிர்மாணம்

பள்ளத்தூர் சௌந்திர ராஜ பெருமாள் கோவில் மீனாட்சிசாரிட்டீஸ்சிபலநகரத்தார்கள் சேர்ந்து செய்த திருப்பணி 1969இல் குடமுழக்கு நடந்தது. தாயார்—சௌந்திரவல்லி சக்கரத்தாழ்வார் சந்நதி சிறப்பு. தென்கலை மரபு. பாஞ்சராத்திர ஆகமப்படி பூசை. சுமார் 4 லெட்சம் செலவில் அமைக்கப்பெற்றது.

இதுவரை கட்டிய கோவில்களின் மொத்தத்திருப்பணிச்செலவுசுமார்50 லெட்சம் வருகிறது. இங்குச் சுட்டப்படாத மற்றைய ஐந்து பெருமாள் கோவில் நிர்மாணச் செலவு ஒரு கோவிலுக்கு 3 இலட்சமாகக் கணக்கிட்டாலும் 15 இலட்சம் ஆக 65 லெட்சம் எளிதாகக் கணக்குக்கு வருகிறது. இது அன்றைய மதிப்பு இந்நாளைய மதிப்பீடு 10 மடங்கு பெருக்க வேண்டும். அப்படியானல் ஆறரைக்கோடி ஆகும்.

தமிழ்க்கடல் ராய.சொ. காட்டிய கணக்குப்படிபாசுரம்பெற்றுள்ள செட்டிநாட்டு எல்லைக்கப்பால் உள்ள தலங்களில் நகரத்தார் செய்த திருப்பணி செலவு 11 இலட்சம். அதன் இன்றையமதிப்பு ஒருகோடியே பத்துலெட்சம் அப்படியானல் நகரத்தார்கள் வைணவ மதத்திற்கு மட்டும் அதாவது பெருமாளுக்காகச் செலவிட்டுள்ளது சுமார் ஏழரைக் கோடிக்கு மேல் எனத் தெரிந்து நாம் மலைக்கிறோம்.

பெருமாள் தொண்டில் பல்லாண்டு பல்லாண்டு ஈடுபட்டதால் இந்த இனம் இன்று கருகாமல் உருகாமல் பெருவாழ்வு பெற்று வருகிறது. இச்சுவை தவிர வேறு எச்சுவை நமக்கு இனிக்கும்!

இதனல் நகரத்தாரின் சமய வெறுப்பின்மை தெரிகிறது. மேலும் தர்மம் செய்வதில் சமய வேறுபாடு காட்டவில்லை.ஆனல் வைணவ சமயவாதிகளாக மாறவும் இல்லை. என்றும் நகரத்தார்சைவ சமயத்தினரேயாவர்.

# நகரக் கோவில்களில் முதல் மரியாதை

**NP. இராமசாமி** (M.A.)
உபதலைவர்,
நகரத்தார் இளைஞர் நற்பணி மன்றம்
*காரைக்குடி.*

எல்லா நகரக் கோயில்களிலும் நாட்பூசையின் இறுதியில் காளாஞ்சி, விபூதி பிரசாதம் கொடுக்கிறபோது "ஒக்கூருடையார்" "ஒக்கூருடையார்" —என்று முதலில் வர அழைப்பார்கள். அங்கிருக்கும் ஒக்கூருடையார் முதலில் காளாஞ்சியைப் பெறுவார். அதன் பிறகு மற்ற கோயில் நகரத்தார்களும் காளாஞ்சி பெறுவர். ஒக்கூருடையாருக்கு முதல்மரியாதை என் என்று இன்றைய தலைமுறையினருக்குத் தெரியாது. அதனை விளக்குவதே இது,

இளையாற்றங்குடியில் ஏழுவழி நாட்டுக் கோட்டை நகரத்தார் வாழ்ந்தனர். பின் ஒற்றுமையின்றி எட்டு வகையாகப் பிரிந்தனர். சாலிவாகன சகாப்தம்—கலியுக வருஷத்தில் ஓர் வகைக் கூட்டத்தாருக்குக் கேரள சிங்கவள நாட்டில் திரிபுவனச் சக்ரவர்த்தி பிரதிஷ்டை செய்த ஷேத்திரமாகிய ***அதிவீரபாண்டியபுரமென்னும் மாற்றூர்க் கோவிலும்*** மற்றொருவகைக் கூட்டத்தாருக்கு வளவேந்திரராசன் பிரதிஷ்டை செய்த ஷேத்திரமாகிய ***வைரவன்பட்டிக் கோவிலுல்,*** மற்றொரு கூட்டத்தாருக்குக் காருண்ய பாண்டியராசன் பிரதிஷ்டை செய்தஷேத்திரமாகிய சொர்ணபுரமென்கிற இரணியூர் கோவிலும், மற்றொரு வகைக் கூட்டத்தாருக்கு நேமநாட்டில் நந்திராசன் பிரதிஷ்டை செய்த ஷேத்திரமாகிய ***நந்திரபுரமென்னும் பிள்ளையார்பட்டி கோவிலும்*** மற்றொரு கூட்டத்தாருக்கு நேம நாட்டில் நேமராசன் பிரதிஷ்டை செய்த ஷேத்திரமாகிய ***மதுநந்திபுரமென்னும் நேமங்கோவிலும்*** மற்றொரு கூட்டத்தாற்கு திரிபுவனசக்கரவர்த்தி பிரதிஷ்டை செய்த ஷேத்திரமாகிய ***அதிவீரபாண்டியபுரமென்றும், பிரமபுரமென்றும் வழங்குகிற இலுப்பைக்குடிக் கோவிலும்*** மற்றொரு வகைக் கூட்டத்தாருக்குப் ***பெதரிகாபுரமாகிய சூரைக்குடி கோவிலும்.*** மற்றொரு கூட்டத்தாருக்குக் ***கெந்தகாபுரியாகிய வேலங்குடிக் கோவிலும்*** இவைகளுக்குத் தனித்தனியே ஷேத்திர சுவாத்தியங்களும் பாண்டியராஜன் விட்டுக்கொடுத்தான். மேலே சொன்னபடி அரசனிடத்திற்கு வராதிருந்தவர்க்ள் ***இளையாற்றங்குடிக் கோவிலையும்,*** அதற்குரிய ஷேத்திர சுவாத்தியங்களையும் தங்களுக்குத் தனியாகவைத்துக் கொண்டார்கள்.

---

நேமங்கோயிலைச் சேர்த்த இளநலமுடையான் முத்துவீரப்பசெட்டி குமரனாகிய அருணாசலமென்பவருடைய மகள் ஐந்து வயதுள்ள "முத்துமீனாள்" என்றபெண்ணைக் ***காருண்யபாண்டியராசன்*** வேட்டைக்கு வந்தகாலத்—தில் நகர்ப்புறத்தில் கண்டுதன் தேரில் ஏற்றிக் கொண்டு தன் நகரத்துக்குப் போனான்.

பின்பு அதனையறிந்து ஒன்பது கோவில் நகரத்தாரும் சேர்ந்து கூட்டங்கூடிச் சிறை யெடுக்கப்பட்ட பெண்ணுக்குச் சாதி நியாயத்தில் ஏற்பட்டிருக்கிற முடிவைச் செய்வதாகப் பேசி முடிவு செய்தனர். பாண்டியராசனிடத்திற்குச் சென்று அப்பெண்ணை விடும்படி கேட்டனர். அரசன் ''பெண்ணைத்தரச் சம்மதிக்கிறேன். அப்பெண்ணை நீங்கள் கொன்றதாகத் தெரிந்தால் அந்த ஒருதலைக்கு எட்டுத் தலையும் எண்ணாயிரம் பொன்னும் உங்களிடத்துவாங்குவோம்'' என்று சொல்லி அப்பெண்ணை விடுவித்தான்.

அவர்கள் வரும்வழியிலே அப்பெண்ணைச் சாதி நியாய முறைப்படி செய்துவிட்டு அரசன் ஆணைப்படி எட்டுத்தலை அனுப்புவதற்கு ஏழு வழிக்கும் ஏழுதலை கொடுக்கலாம். பின்னும் ஒருதலை வேண்டுமே அதற்கு என் செய்வது? என்று சிந்தித்தனர். அப்போது இளையாற்றுங்குடிக் கோவிலில் ஒருபிரிவாராகிய ஒக்கூருடையார் எழுந்து **வெயனுகக் கொடுக்க வேண்டிய ஒரு தலையையும் நாங்கள் கொடுக்கிறோம்.** மானம் பெரிதேயன்றி உயிர் பெரிதில்லை.'' கோவில், குருஸ்தானங்களில் விபூதி முதலான அனைத்து மரியாதையும் முதலில் எங்களுக்குச் செய்ய வேண்டும்' என்றுசொல்ல, நகரத்தாரும் அதற்கு இசைந்தனர். பின்பு நகரத்தார் யாவரும் அரசனிடம் சென்று ''அரசன் ஆணைப்படி எட்டுப் பேர்தலை கொடுக்கவும் எண்ணாயிரம் பொன்னும் கொண்டு வந்திருக்கிறோம்'' என்றனர். ''ஒரு பெண் பழிபோதும் நீங்கள் ஒன்றும் தரவேண்டாம். போய்வாருங்கள்'' என்று அரசன சொல்ல நகரத்தார் திரும்பி தம்மூர் வந்தனர்.

அந்தப் பெண்பழி நீங்கும் பொருட்டு உருத்திரபதீசுவரருக்குத் திருப்பணி செய்து முடிந்து இனிவேலங்குடியில் குடியிருக்கலாகாதென்று அவ்வூரை விட்டு, எல்லோரும் மாற்றூர் முதலிய இடங்களில் வந்து குடியிருப்பு ஏற்படுத்திக் கொண்டார்கள்.

ஒக்கூருடையாருக்கு நகரக் கோயில்களில் முதல்மரியாதை செய்வதற்கு இதுவே காரணமாகும். கட்டுப்பாடு, சொல்லுறுதி நாணயம், தியாகம் முதலான குணங்கள் வாய்ந்தவர்கள் நகரத்தார் என இதனால் தெளியலாம். ஆயினும்:...

1. இவ்வரலாற்றிற்கு எது மூலம்? ஆதாரம் என்ன?
2. இது நிகழ்ந்தகாலம் யாது? விவரம் உண்டா?
3. இதில் காணப்படும் அரசன் பெயர்கள் சோழ பாண்டியர் வரலாற்றில் உண்டா?
4. ஏழுவழி இளையாற்றுங்குடி நகரத்தார் எப்போது எட்டுப்பிரிவாகப் பிரிந்தனர்? ஆதாரம் என்ன?

இவ்வினாக்களுக்கு நாம் விடைகாண வேண்டியுள்ளது.

---

*சர்வதாரி ஆவணி மீ 27 உ க்கு 1888-ஆம் வருடம் செப்டம்பர் மீ 10உ சுவாமி சந்நதி ராஜகோபுரம் திரு ராம. ஆசு. ராம. ராமநாதன் செட்டியார் உபயம்*

★ ★ ★

*திருக்கல்யாண முன் மண்டபம் 1989-ஆம் வருடம் ஏப்ரல் மாதம் சேந்தணியர் வீட்டு ராம. வீர இராமசாமி செட்டியார் அவர்களால் பெரும் பொருட் செலவில் கட்டப்பெற்றது.*

## 9 கோவில்கள், பிரிவுகள், புள்ளிகள்

| | | புள்ளிகள் |
|---|---|---|
| 1. | இளையாற்றங்குடி கோவில் (வழி) கீழச்சிவற்பட்டி<br>(கைலாசநாதர் - நித்தியகல்யாணி)<br>பிரிவுகள் : 1. ஒக்கூருடையார் 2. பட்டினசாமி<br>3. பெருமருதூருடையார் 4. கழனிவாசல்<br>5. கிங்கிணிக்கூருடையார் 6. பேர்செந்தூருடையார்<br>7. சிறுசேத்தூருடையார், | 4,555 |
| 2. | மாத்தூர் கோவில் (வழி) காரைக்குடி.<br>(ஐநூற்றீசர் – பெரியநாயகி)<br>பிரிவுகள் : 1. உறையூர் 2. அரும்பாக்கூர்<br>3. மணலூர் 4. மண்ணூர்<br>5. கண்ணூர் 6. கருப்பூர்<br>7. குளத்தூர். | 4,563 |
| 3. | வைரவன் கோவில் (வழி) திருப்பத்தூர்<br>(வளரொளிநாதர் – வடிவுடையம்மை)<br>பிரிவுகள் : 1. சிறுகுளத்தூருடையார் (பெரியவகுப்பு, தெய்யனார், பிள்ளையார் வகுப்பு)<br>2. கழனிவாசல்<br>3. மருதேந்திரபுரமுடையார் | 4,868 |
| 4. | இரணிக்கோவில் (வழி) கீழச்சிவற்பட்டி<br>(ஆட்கொண்டநாதர்—சிவபுரந்தேவி) | 2,387 |
| 5. | பிள்ளையார்பட்டிக்கோவில் (வழி) திருப்பத்தூர்<br>(விநாயகர்—கற்பக விநாயகர்) திருவீசர்—சிவகாம வல்லி, மருதீசர்—வாடாமலர் மங்கை) | 2,962 |
| 6. | நேமம் கோவில் (வழி) குன்றக்குடி<br>(ஜெயங்கொண்டசோழீசர்—சவுந்தரநாயகி) | 1,428 |
| 7. | இலுப்பைகுடிக்கோவில் (வழி) காரைக்குடி<br>(தான்தோன்றீசர்—சவுந்தரநாயகி) | 2,407 |
| 8. | சூரக்குடிக்கோவில் (வழி) சொக்கநேந்தல்<br>(தேசிகர்—ஆவுடையநாயகி) | 1,130 |
| 9. | வேலங்குடிக்கோவில் (வழி) கோட்டையூர்<br>(சண்டீசுவரர்—காமாட்சியம்மை) | 36 |
| | ஆக நகரத்தார் புள்ளிகள் | 24,316 |

(பிப் 1988ல் 9 கோவில் பதிவேட்டில் உள்ளபடி)

— நன்றி நாநயா கையேடு 1988

## காரைக்குடி நகரச்சிவன் கோவில் ஆடிப்பூரத் திருநாள் விபரம்

| திருநாள் | உபயதார் | மண்டகப்படிவிவரம் |
|---|---|---|
| முதல்நாள் | நகரத்தார் | |
| 2ஆம்நாள் | கி. புதூர் நகரத்தார் | மரச்சிம்மம் |
| 3ஆம்நாள் | ஆத. செ. ராம. மெ. | மரக்காமதேனு |
| 4ஆம்நாள் | சா. நா. அழ. அ.<br>சா. நா. அழ. சொ.<br>சா. நா. அழ. சித | வெள்ளிக் கைலாச வாகனம் |
| 5ஆம்நாள் | மெ. கு. அழ. & மெய. மெ. | கோரதம் |
| 6ஆம்நாள் | அடை. அழ. வகை | வெள்ளி |
| 7ஆம்நாள் | மூ. பெ. சேவு. பங்காளிகள் | வெள்ளியானை |
| 8ஆம்நாள் | கும. சி. நா. நா. ஷே சுப.<br>முத்துவெ. சொ. நா. | வெள்ளிக்குதிரை |
| 9ஆம்நாள் | தேர் | நகரத்தார் |
| 10ஆம்நாள் | வெ. பெரி. வெ. பொது | வெள்ளிப்பல்லக்கு |
| 11ஆம்நாள் | ஆறு. ஆ. பங்காளிகள் | கேடகம் |
| 12ஆம்நாள் | சுப. சு அரு. சுப. | திருக்கல்யாணம்-பஞ்சமூர்த்திஉலா |

★ ★ ★

## விரதம் - நோன்பு இருக்கும் முறை

1. விரதங்களை நல்லநாளில் தொடங்க வேண்டும்.
2. மணமான பெண்டிர் கணவன் அனுமதியோடு விரதங்களைத் தொடங்க வேண்டும்.
3. விரதநாளுக்கு முன் ஒருநாள், ஒருவேளையே உண்ண வேண்டும்.
4. மறுநாள் நீராடி, விரதம் தொடங்குவதாய் சங்கல்பம் செய்துபூசை செய்தல்வேண்டும்.
5. முடிக்கும்நாளில் எளிய உணவு உண்டு, நரம்பைத்தூண்டும் உணவை விலக்கி, நல்லோரைக் காணல் வேண்டும்.
6. அன்று பெண் சேர்க்கை கூடாது.
7. விரதம் நோற்பதில் இடையூறு எதும் வரின், மூன்று நாள் உணவை நீத்து, மவுனம் இருந்து, கழுவாய் தேட வேண்டும்.

— நா. பாலாம்பாள் ஆச்சி

## அனைத்து நகரத்தார் புள்ளி விபரம் (88பிப்ரவரியில் கோவில் பதிவேட்டில் உள்ளபடி)

| ஊர்ப்பெயர் | பின்கோடு | பி-பட்டி | இளை. குடி | மாத் தூர் | இலு. குடி | சூ. குடி | நேமம் | இர. கோவில் | வயிர. கோயில் | வேலங் குடி | மொ புள்ளி. |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| தெ.வட்டகை | | | | | | | | | | | |
| நா.கோட்டை | 623 556 | 67 | 295 | 115 | ... | 52 | ... | 53 | 36 | ... | 616 |
| கோ.அழகாபுரி | 623 560 | — | 54 | ... | ... | ... | ... | ... | ... | ... | 54 |
| பாகனேரி | 623 558 | 83 | 65 | 60 | ... | 8 | ... | ... | 132 | ... | 348 |
| சொ.புரம் | 623 313 | 40 | 50 | 97 | ... | ... | ... | ... | ... | ... | 187 |
| மதகுபட்டி | 623 553 | — | 87 | 28 | ... | ... | ... | ... | 19 | ... | 134 |
| அ.கோட்டை | 623 553 | 10 | ... | 123 | 51 | ... | ... | ... | 12 | ... | 196 |
| ஒக்கூர் | 623 557 | ... | 23 | ... | 58 | ... | ... | ... | 28 | ... | 109 |
| கீழப்பூங்குடி | 623 507 | ... | 1 | 49 | 52 | ... | ... | ... | ... | ... | 102 |
| சோழபுரம் | 623 503 | ... | ... | 18 | ... | ... | ... | ... | ... | ... | 18 |
| சக்கந்தி | 623 560 | ... | 23 | ... | ... | ... | ... | ... | ... | ... | 23 |
| கா. மங்கலம் | 623 557 | ... | 10 | ... | ... | 59 | ... | ... | 32 | ... | 101 |
| கருங்குளம் | 623 515 | ... | 5 | 5 | ... | ... | ... | 22 | 14 | 14 | 60 |
| க.மாணிக்கம் | 623 204 | 51 | 33 | 54 | 41 | 22 | ... | ... | 137 | ... | 338 |
| அ.சிறுவயல் | 623 305 | ... | 6 | 26 | ... | 60 | 7 | ... | 18 | ... | 117 |
| வெற்றியூர் | 623 305 | ... | 6 | 53 | ... | ... | ... | ... | 15 | ... | 74 |
| பனங்குடி | 623 555 | ... | ... | ... | 19 | 3 | ... | ... | 3 | ... | 25 |
| நடராஜபுரம் | 623 555 | ... | 6 | 9 | 38 | 34 | ... | ... | 17 | ... | 104 |
| செம்பனூர் | 623 313 | ... | ... | ... | ... | ... | 59 | ... | ... | ... | 59 |
| பட்டமங்கலம் | 623 310 | 10 | 23 | 24 | 6 | 32 | ... | ... | ... | 2 | 97 |

## அனைத்து நகரத்தார் புள்ளி விபரம் (88பிப்ரவரியில் கோவில் பதிவேட்டில் உள்ளபடி)

| ஊர்ப்பெயர் | பின்கோடு | பி-பட்டி | இளை. குடி | மாத்தூர் | இலு. குடி | சூ. குடி | நேமம் | இர. கோவில் | வயிர. கோயில் | வேலங் குடி | மொ புள்ளி. |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| மேல.வட்டகை | | | | | | | | | | | |
| கீழச்சிவப்பட்டி | 623 205 | 83 | 54 | 61 | ... | 193 | 30 | 20 | 140 | ... | 581 |
| விராமதி | 623 212 | — | 126 | ... | ... | ... | ... | ... | 13 | ... | 139 |
| பி.அழகாபுரி | 623 205 | ... | ... | 158 | ... | ... | ... | 12 | ... | ... | 170 |
| நெற்குப்பை | 623 405 | 20 | 151 | 7 | ... | 44 | 78 | 169 | 1 | ... | 470 |
| கண்.பட்டி | 623 203 | 79 | 148 | 68 | ... | ... | ... | ... | 57 | ... | 352 |
| சிறுகூடல்பட்டி | 623 215 | 20 | 22 | 133 | ... | ... | ... | ... | 70 | .. | 245 |
| பூலாங்குறிச்சி | 623 413 | 95 | 19 | ... | 41 | 47 | ... | 14 | 77 | ... | 293 |
| ஆ.தெக்கூர் | 623 201 | ... | 56 | 146 | ... | ... | ... | 9 | 18 | ... | 229 |
| ஆவிணிப்பட்டி | 623 205 | 11 | 61 | 68 | ... | 3 | ... | ... | 22 | ... | 165 |
| செவ்வூர் | 623 417 | ... | ... | ... | ... | 157 | ... | 16 | ... | ... | 173 |
| மகிபாலன்பட்டி | 623 217 | ... | 57 | 9 | ... | ... | ... | ... | 47 | ... | 113 |
| கீழ.வட்டகை | | | | | | | | | | | |
| தேவகோட்டை | 623 302 | 202 | 630 | 503 | 845 | ... | 137 | 189 | 615 | 6 | 3127 |
| ஆ.சமுபுரம் | 623 341 | 9 | 174 | 110 | ... | 3 | 6 | ... | ... | ... | 302 |
| தா.ஊரணி | 623 302 | 2 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ; |
| கீழ.அரிமளம் | 622 201 | 91 | 35 | 145 | 6 | ... | 76 | 46 | 141 | ... | 540 |
| கடியாபட்டி | 622 505 | ... | 93 | 23 | 7 | ... | ... | 157 | 253 | ... | 533 |
| இராவரம் | 622 506 | 11 | 149 | 142 | ... | ... | ... | 39 | 179 | ... | 520 |
| தேனிபட்டி | 622 202 | ... | 9 | ... | ... | ... | ... | 39 | 39 | ... | 87 |

## அனைத்து நகரத்தார் புள்ளி விபரம் (88பிப்ரவரியில் கோவில் பதிவேட்டில் உள்ளபடி)

| ஊர்ப்பெயர் | பின்கோடு | பி-பட்டி | இளை. குடி | மாத் தூர் | இலு. குடி | சூ. குடி | நேமம் | இர. கோவில் | வயிர. கோயில் | வேலங் குடி | மொ புள்ளி |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| மேலப்பத்தூர் வட்டகை | | | | | | | | | | | |
| வலையபட்டி | 622 411 | 303 | 60 | 180 | 27 | ... | 117 | 12 | 306 | ... | 1005 |
| உலகம்பட்டி | 622 410 | 18 | 76 | 22 | ... | ... | 27 | 16 | 4 | ... | 163 |
| குழிபிறை | 622 402 | 24 | 171 | 185 | 70 | ... | ... | 42 | 34 | ... | 526 |
| பொ.புதுப்பட்டி | 622 408 | ... | 152 | ... | 13 | ... | ... | ... | 201 | ... | 366 |
| நற்சாந்துபட்டி | 622 404 | 156 | 83 | 49 | 129 | ... | ... | ... | 105 | ... | 522 |
| வேந்தன்பட்டி | 622 403 | ... | 78 | 182 | 79 | ... | 89 | 49 | 44 | ... | 531 |
| மேலச்சிவபுரி | 622 403 | 136 | 2 | ... | ... | ... | 118 | 13 | 82 | ... | 351 |
| வேகுப்பட்டி | 622 408 | 117 | 84 | 8 | ... | 104 | ... | ... | ... | ... | 313 |
| கொ.பட்டி | 622 401 | ... | 3 | ... | ... | ... | ... | 247 | 18 | ... | 268 |
| விராச்சிலை | 622 412 | ... | 42 | 16 | 41 | 10 | ... | ... | 126 | ... | 235 |
| ராங்கியம் | 622 409 | ... | 83 | ... | 68 | ... | 55 | 48 | 1 | ... | 255 |
| பனையபட்டி | 622 406 | ... | 4 | 122 | 37 | 6 | ... | 40 | 2 | ... | 211 |
| குருவிகொ.பட்டி | 622 415 | 39 | 30 | 28 | 2 | 44 | ... | 52 | 14 | ... | 209 |
| மிதிலைப்பட்டி | 622 409 | 33 | 57 | 48 | ... | 8 | ... | 50 | ... | ... | 196 |
| வி.லெட்சுமிபுரம் | 622 412 | ... | ... | 5 | 76 | ... | ... | ... | 15 | ... | 96 |

## அனைத்து நகரத்தார் புள்ளி விபரம் (88பிப்ரவரியில் கோவில் பதிவேட்டில் உள்ளபடி)

| ஊர்ப்பெயர் | பின்கோடு | பி-பட்டி | இளை. குடி | மாத்தூர் | இலு. குடி | சூ. குடி | நேமம் | இர. கோவில் | வயிர. கோயில் | வேலங் குடி | மொ புள்ளி. |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| பதினாறூர் வட்டகை | | | | | | | | | | | |
| காரைக்குடி | 623 001 | 580 | 480 | 373 | 19 | 59 | 275 | 140 | 369 | 14 | 2309 |
| பள்ளத்தூர் | 623 107 | ... | 68 | ... | 58 | 53 | 120 | 246 | 166 | ... | 711 |
| கண்டனூர் | 623 104 | 87 | 16 | 205 | 55 | 45 | 16 | 68 | 141 | ... | 633 |
| புதுவயல் | 623 108 | 19 | 184 | 5 | 32 | 68 | ... | 73 | 116 | ... | 497 |
| கோட்டையூர் | 623 106 | 12 | 90 | 121 | ... | ... | 117 | 62 | ... | ... | 402 |
| கோ.அழகாபுரி | 623 106 | 9 | 36 | 3 | ... | ... | ... | 57 | 32 | ... | 137 |
| உ சிறுவயல் | 623 208 | ... | 65 | 129 | 77 | ... | ... | ... | 94 | ... | 365 |
| கா.காத்தான் | 623 103 | ... | 124 | 71 | ... | ... | 59 | 63 | 10 | ... | 327 |
| கொ. மங்கலம் | 623 105 | ... | ... | 63 | 3 | ... | ... | 172 | 18 | ... | 256 |
| கொ.லெ புரம் | 623 105 | 5 | ... | 64 | ... | ... | ... | ... | ... | ... | 69 |
| நே.பட்டி | 623 103 | ... | 24 | 25 | 58 | ... | ... | 59 | 77 | ... | 243 |
| பலவான்குடி | 623 208 | ... | 15 | 7 | ... | ... | ... | 93 | 70 | ... | 195 |
| அரியக்குடி | 623 202 | ... | 19 | ... | ... | ... | ... | ... | 118 | ... | 137 |
| சொ.புதூர் | 623 101 | ... | ... | 29 | ... | ... | ... | ... | 114 | ... | 143 |
| அமராவதிபுதூர் | 623 301 | 30 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | 30 |
| கல்லல் | 623 305 | 12 | 81 | 49 | ... | 16 | 27 | ... | 197 | ... | 382 |
| மானகிரி | 623 307 | ... | ... | 12 | 26 | ... | ... | 2 | 35 | ... | 75 |
| கல்லுப்பட்டி | 623 306 | 87 | 47 | 58 | ... | ... | ... | 2 | ... | ... | 194 |
| நாச்சியாபுரம் | 623 207 | 79 | 2 | ... | 152 | ... | ... | ... | 29 | ... | 262 |
| சிறுவயல் | 623 206 | 46 | ... | ... | 34 | ... | ... | ... | 7 | ... | 87 |
| கோனாபட்டு | 622 503 | 152 | 39 | 16 | 189 | ... | ... | 6 | 42 | ... | 444 |
| ஆத்தங்குடி | 623 101 | 85 | 31 | 124 | ... | ... | ... | ... | 125 | ... | 365 |
| ஆ.மு பட்டணம் | 623 101 | 53 | 24 | 78 | ... | ... | ... | ... | ... | ... | 155 |
| | Total | 2962 | 4655 | 4563 | 2407 | 1134 | 1478 | 2397 | 4848 | 36 | 24480 |